# பாரதி தமிழ் வாசகம்

## நான்காம் புத்தகம்

V. நடராஜன், B.A., L.T.,
ஜில்லா கல்வி அதிகாரி

APPROVED BY THE T. B. C., MADRAS.

(*Vide page 7*) *Part I D/27-4-43 & Page 106 (Part 11)D/2-6-'42*

*of the Consolidated list)*

---

V. S. வெங்கடராமன் கம்பெனி
பப்ளிஷர்ஸ் :: கும்பகோணம்



[விலை அணா 8

Reprinted : August 1947



# முன்னுரை

துரைத்தனத்தார் சமீப காலத்தில் வெளியிட்ட புதிய பாட திட்டத்தில் குறிப்பிட்டிருக்கும் தாய் மொழிப் போதனையின் நோக்கத்தையும் முறையையும் அனுசரித்து இந்தப் புத்தகம் தயாரிக்கப்பட்டுள்ளது.

"கைத் திறன்" என்ற பாட்டைச் சேர்த்துக் கொள்ள அனுமதியளித்த கவிஞர் ஸ்ரீ சி. தேசிக விநாயகம் பிள்ளையவர்கட்கும், சுதேசமித்திரன் பத்திரிகையில் பிரசுரமான செய்திகளைச் சேர்த்துக்கொள்ள அனுமதி கொடுத்த சுதேசமித்திரன் பத்திராலயத்தார்க்கும் என் நன்றி உரித்தாகும்.

இளைஞரது மனப்பான்மைக்குப் பொருந்திய பழையனவும் புதியனவுமான பாட விஷயங்களும், நூதன முறைப்பயிற்சிகளும் அடங்கிய இப் பாரதி நான்காம் வாசகம் மிக்க பயன் அளிக்குமென்று நம்புகிறேன்.

V. நடராஜன்

Forms 5 to 8 Printed at
The Royal Printing Works, Madras. M. S. 175
for V. S. Venkataraman & Co., Q. H. M. S. 63—6000 Copies

# பொருளடக்கம்

---

———

# பாரதி தமிழ் வாசகம்

## நான்காம் புத்தகம்

---

## 1. தமிழ் நாடு

பாடத்தைப் படித்துக் கண்டுபிடி :

1. தாய் மொழியைக் கற்பதின் நோக்கங்கள் என்ன ?

2. தமிழ் நாட்டில் பாயும் நதிகள் எவை ?

3. தமிழ் நாட்டின் எல்லைகள் எவை ?

4. பண்டைக் காலத்தில் தமிழகம் எந்த மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது ?

5. இப்பாடத்தில் சொல்லியுள்ள வினைபொருள்களை எடுத்தெழுது.

1. நீங்கள் பிறந்தது முதல் பேசிவருவது தமிழ்ப்பாஷை. பாஷையை மொழி என்றும் சொல்லலாம். தமிழ் நமக்குத் தாய்மொழி. அது பல நூற்றுண்டுகளாக வளர்ந்து வந்துள்ள ஒரு இனிமையான மொழி. தாய் மொழியில் திருத்தமாகப் பேசவும், சுலபமாகப் படிக்கவும், எழுதவும் பழகத்தான் நீங்கள் இந்தப் பாரதி தமிழ் வாசகம் படிக்கிறீர்கள். தமிழில்

அநேக அரிய பெரிய புத்தகங்கள் இருக்கின்றன நீங்கள் அவைகளைப் படித்தால் நல்ல அறிவைப் பெறுவீர்கள்.

2. நமக்குத் தாய்மொழி தமிழானகயால் நாம் தமிழர்கள் எனப்படுகிறோம். நமது முன்னோர்களாகிய தமிழ் மக்கள் நல்ல ஒழுக்கம், கல்வி, நாகரிகம் முதலிய மேலான குணங்கள் படைத்தவர்கள். ஜாதி, மதம், தொழில்களில் பலவகைப்பட்டிருந்தாலும் அவர்கள் அனைவரும் சகோதரர்களே. ஆதலால், தமிழ் மக்களாகிய நாம் அன்புடனும், ஒற்றுமையுடனும் வாழ வேண்டும்.

3. தமிழர் வசிக்கும் நாடு தமிழ்நாடு. தமிழ் நாட்டைத் தமிழகம் என்றும் சொல்லுவதுண்டு. அது தெற்கில் கன்னியாகுமரி முதல் வடக்கில் திருப்பதி மலை வரையிலும் பரவியுள்ளது.

4. தமிழ் நாடு நிலவளம், நீர்வளம் முதலிய பல வளங்கள் பொருந்தியது. ஓங்கி வளர்ந்த காடுகளும், உன்னதமான மலைகளும் இதில் பல உள்ளன. பெண்ணையாறு, பாலாறு, காவிரி, வைகை, தாம்பிரபரணி முதலிய நதிகள் இந்நாட்டில் பாய்கின்றன. புன்செய்த்தானியங்களும், நன்செய்த் தானியங்களும் ஏராளமாக

இங்கு விளைகின்றன, தென்னை, கமுகு, கரும்பு, வாழை முதலியனவும் இந்நாட்டில் உற்பத்தியாகின்றன.

5. பண்டைக் காலத்தில் தமிழகம் சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு என மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இவைகளைச் சேரர், சோழர், பாண்டியர் என்னும் தமிழ் அரசர்கள் ஆண்டு வந்தார்கள். அவர்களுக்குத் தமிழ் நாட்டு மூவேந்தர் என்று பெயர். அக்காலத்தில் அவர்கள் அமைத்த அரண் பொருந்திய நகரங்களும், அழகிற் சிறந்த கோயில்களும் இப்பொழுதும் உள்ளன.

6. நமது தாய்நாடாகிய தமிழ் நாடு செழிக்க நாம் ஒவ்வொருவரும் பாடுபடுவோமாக!

மொழிப் பயிற்சி

(i) சொல் விளக்கம் :—மக்கள் = ஜனங்கள். படைத்தவர்கள் = உடையவர்கள். அனைவரும் = எல்லோரும். உன்னதமான = உயரமான. கமுகு = பாக்கு மரம். புன்செய் = புழுதியில் பயிரிடப்படும் நிலம். நன்செய் = சேற்றில் பயிரிடப்படும் நிலம். பண்டைக்காலத்தில் = முன் காலத்தில். தமிழகம் = தமிழ் நாடு. பாண்டிய நாடு = மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்கள். சோழ நாடு = தஞ்சை, திருச்சி ஜில்லாக்கள். சேர நாடு = சேலம், கோயமுத்தூர், மலையாளம் ஜில்லாக்கள் அரண் = கோட்டை. நூற்றாண்டு = நூறு வருஷம்.

(ii) வாக்கியம் :—'நீங்கள் பிறந்ததுமுதல் பேசி வருவது தமிழ்ப் பாஷை.' இதைப்போல் பல சொற்கள் தொடர்ந்து ஒரு கருத்தை முடியும்படி தெரிவிப்பது வாக்கியம் எனப்படும். வாக்கியத்தின் முடிவில் முற்றுப்புள்ளி போடவேண்டும்.

நமது தமிழ் மொழியைப்பற்றி மூன்று வாக்கியங்கள் எழுது.

---

## 2. குறிப்புக்கள் எழுது

1. உன்னைப்பற்றிய விவரங்களை எழுதி இந்த நமூனாவைப் பூர்த்தி செய்.

பெயர்..............................................................
பிறந்த ஊர்.......................................................
பிறந்த தேதி......................................................
உயரம்.............................................................
மார்பு அளவு......................................................
நிறை...............................................................
விலாசம்...........................................................
படிக்கும் வகுப்பு.................................................
பாடசாலை........................................................

2. பள்ளிக்கூடத்தில் என்னென்ன பாடங்கள் படிக்கிறாய்? எந்தப் பாடத்தில் உனக்கு விருப்பம் அதிகம்? எந்த விளையாட்டில் உனக்கு அதிகப் பிரியம்?

3. ஊரிலிருந்து வந்த உன் மாமாவைக் கண்டதும் சாதாரணமாக என்ன கேள்விகள் கேட்பாய்? ஐந்து சொல்.

---

# 3. தேசிங்கு ராஜன்

பாடத்தைப் படித்து விடை கண்டுபிடி.



1. தேசிங்கு ராஜன் யார்?
2. 'நீலவேணி' என்பது என்ன? அது யாரிடத்திலிருந்தது?
3. தேசிங்கு அதை எப்படி அடக்கினன்?
4. அவனுக்குக் கிடைத்த வெகுமதி என்ன?
5. செஞ்சியில் பார்க்கத்தக்கன யாவை?

1. நமது தமிழ் நாட்டில் செஞ்சி என்று ஓர் ஊர் இருக்கிறது. அதில் சுமார் முந்நூறு வருஷங்களுக்கு முன் தேசிங்கு ராஜன் என்ற ஓர் அரசன் இருந்தான். அவன் இளம்பிராயத்திலேயே ராஜாவாக ஆட்சி செய்யத் தொடங்கினுன்.

2. தேசிங்கு ராஜனுக்குச் சிறு வயது முதற் கொண்டே பயம் என்பது தெரியாது. இளம் பருவத்திலேயே அவன் துணிச்சலாகப் பல வீரச் செயல்களைச் செய்து பெரும்புகழ் பெற்

ருன். குத்துச் சண்டையிலும், கத்திச் சண்டையிலும், குதிரை ஏறிச் சவாரி செய்வதிலும் தேசிங்கு மிக்க திறமையுள்ளவன்.

3. டில்லி மாநகரில் அக்காலத்தில் ஒரு மகமதிய அரசர் இருந்தார். அவரிடம் நீலவேணி என்னும் பெயருள்ள ஒரு பெரிய முரட்டுக் குதிரை இருந்தது. அதன்மேல் ஏறிச் சவாரிசெய்ய எவருக்கும் முடியவில்லை. அக் குதிரையை அடக்கிச் சவாரி செய்பவனுக்கு அதைக் கொடுப்பதாக டில்லி சுல்தான் தெரிவித்தார். இதைக் கேள்விப்பட்ட தேசிங்கு டில்லிக்குப் போய், அந்தக் குதிரைமேல் ஏறிச் சவாரி செய்ய வந்திருப்பதாகச் சுல்தானிடம் தெரிவித்தான். சுல்தான் அவனைப் பார்த்துச் சிரித்து, " நீயோ சிறு பிள்ளை. எங்கள் பெரிய குதிரையின் அருகில்கூடப் போகமுடியாது." என்று சொன்னார். சிறுவன் "குதிரையைக் கொண்டுவரச் சொல்லுங்கள், பார்க்கலாம்" என்றான். சுல்தான் உடனே நீலவேணியைக் கொண்டுவரக் கட்டளையிட்டார்.

4. குதிரை அவ்விடம் வந்ததும் ஒரு பெரிய கனைப்புக் கனைத்தது. அதைக் கேட்டு அங்குள்ளவர்கள் பயந்து நடுங்கினார்கள். ஆனால் தேசிங்கு அந்தப் பெரிய குதிரையின்

அருகே சென்று அதைத் தட்டிக் கொடுத்தான். பிறகு அதன் பிடரி மயிரைத் தாவிப் பிடித்து, ஒரே பாய்ச்சலாய் அதன் முதுகின்மேல் ஏறிக் கொண்டான். அது வெகு வேகமாக ஓடிய தென்றாலும் அவன் கீழே விழவில்லை. அதை அடக்கிப் பிடித்துப் பல திசைகளிலும் துரத்தி யடித்தான். கடைசியில் அது களைத்துப்போன வுடன் சுல்தான் முன் அதைக் கொண்டு வந்து நிறுத்தி, தேசிங்கு இறங்கினான். அதைப் பார்த்த எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். சுல்தான் தேசிங்கை மெச்சி, அந்தக் குதி ரையை அவனுக்குக் கொடுத்தார்; ஆற்காடு நவாபுக்குக் கப்பம் கட்ட வேண்டாமென்றும் சொன்னார். தேசிங்கு ராஜனும் ஊருக்குத் திரும்பி அரசாண்டு வந்தான்.

5. தேசிங்கு ராஜனால் செஞ்சி மலைமீது கட்டப்பட்ட கோட்டைகளும், கோவில்களும் இப்போதும் வெகு அழகாக இருக்கின்றன. நீங்கள் பெரியவர்களானதும் அவைகளைப் போய்ப் பார்க்கவேண்டும்.

மொழிப் பயிற்சி

(i) வாக்கியங்களில் வைத்து எழுது :—

பிடரி, இளம்பிராயத்தில், சவாரி, கப்பம் (= வரிப் பணம்), பாய்ச்சலாய், ஆட்சி, மெச்சி.

(ii) 'என்று ஓர் இருக்கிறது ஊர் செஞ்சி.'

இதில் ஐந்து சொற்கள் இருக்கின்றன. அவைகள் சரியான வரிசையில் இல்லாததினால் பொருள் விளங்கவில்லை. 'செஞ்சி என்று ஓர் ஊர் இருக்கிறது.' என்று மாற்றி எழுதினால் பொருள் விளங்கி வாக்கியம் ஆகிறது.

பின்வரும் சொற்களைத் தக்கபடி மாற்றி வாக்கியமாக எழுது:

1. இட்டலி குடித்தான் நீர்மோர் தின்று.
2. வந்ததும் அவ்விடம் ஒரு கனைத்தது குதிரை கனைப்பு பெரிய.
3. பயம் தேசிங்கு என்பது தெரியாது ராஜனுக்கு.
4. வசிப்பது நாடு நாம் தமிழ்.
5. புல் பசித்தால் புலி தின்னுமா ?

(iii) பல வாக்கியங்கள் சேர்ந்து பாரா அல்லது பத்தி ஆகும்.

1. இந்தப் பாடத்தில் எத்தனை பாராக்கள் இருக்கின்றன ?
2. முதல் பாராவில் எத்தனை வாக்கியங்கள் இருக்கின்றன ?

---

# 4. தேசிங்கு ராஜன் (பாட்டு)

படித்தறிந்து சொல் :

1. தேசிங்கு ராஜன் ஏன் கப்பங் கட்ட மறுத்தான் ?
2. தேசிங்கு ராஜன் காட்டிய கோபக் குறிகள் யாவை ?
3. அப்போது தோன்றமல்லன் என்ன செய்தான் ?

[தேசிங்குக்குமுன் இருந்த ராஜாக்கள் ஆற்காடு நவாபுக்குக் கப்பங் கட்டுவது வழக்கம். டில்லி சுல்தான் கப்பங் கட்டவேண்டாம் என்று சொல்லியிருந்தார். ஆதலால் தேசிங்கு ராஜனிடம், ஆற்காடு நவாபு அனுப்பிய தோன்றமல்லன் என்னும் தூதன் பணம் கேட்டபொழுது, தேசிங்கு வீரத்தன்மையுடன் கோபங் கொண்டது.

பல்லைப் படபட வென்று
கடித்தானையா ராஜா தேசிங்கு;
கையைத் தூக்கிக் கனைத்துத்
தட்டினுன் ராஜா தேசிங்கு;
இனி யில்லாத கோபமாச்சுது
அந்த ராஜாவுக்கானலும்
கோபத்தினலே கட்டி யவனைக்
கொல்ல வெழுந்தானும்.
பார்த்தவுடனே தோன்றமல்லனும்
பதைத்து விழுந்தானும்;
விழுந்தவுடனே சலாஞ் செய்து
வேண்டிக் கொண்டானும்;
தலையை யசைத்துத் தோளை
நெறித்தான் ராஜா தேசிங்கு;
கண்களை யுருட்டிக் கதும்பினனையா
காளை சிங்கம்போலே.

---

## 5. ஒரு விநோத விளையாட்டு

இந்த விளையாட்டு விளையாடி யிருக்கிருயா? இங்கே சில கேள்விகளும், அடியில் சில சொற்களும் இருக்கின்றன. கேள்விக்குப் பொருத்தமான வார்த்தையைக் கண்டுபிடி.

வகுப்பில் எவன் முதலில் சரியான விடைகள் எழுதிக் காட்டுகிருனே அவனே கெலித்தவன் ஆவான்.

1. எது எரியும்? 2. எது பள்ளத்துக்கு ஓடும்? 3. எது உருகும்? 4. எது பறக்கும்? 5.எது இரவில் வெளிச்சம்தரும்? 6. எது சுடும்? 7. எது குளிர்ச்சியாக இருக்கும்? 8. எது மிதக்கும்? 9. எதுவேகமாக ஓடும்? 10. எது மெதுவாக நகரும்? 11. எது நீலமாக இருக்கும்? 12. எது கர்ஜிக்கும்?

| | | |
|---|---|---|
| சிங்கம் | முயல் | பனிக்கட்டி |
| வானம் | நெருப்பு | ஆமை |
| சந்திரன் | விமானம் | மண்ணெண்ணெய் |
| தண்ணீர் | படகு | வெண்ணெய் |

---

# 6. எங்கள் சிறு தோட்டம்

விடை கண்டுபிடி:

1. தோட்டங்கள் இருப்பதாலுள்ள நன்மைகள் யாவை?

2. இப்பாடத்தில் வந்துள்ள புஷ்பங்களின் பெயர்களையும் காய்கறிகளின் பெயர்களையும் எடுத்து எழுது.

3. செடிகளைப் பயிர் செய்வதில் கவனிக்கவேண்டிய முறைகள் யாவை?

4. புஷ்பங்கள் எவ்வெவ்விதங்களில் பயன்படுகின்றன?

5. இயற்கைப் பாடப் படிப்புக்குத் தோட்டங்கள் உதவியாவது எப்படி?

1. எனது சகோதரி கமலமும், நானும் எங்கள் வீட்டின் முன்புறத்தில் புஷ்பத் தோட்

டம் ஒன்றும், புறக்கடையில் காய்கறித் தோட்டம் ஒன்றும் வைத்து வளர்த்து வருகிறோம். பாடங்கள் படித்த பிறகு, ஓய்வு நேரங்களில்



தோட்ட வேலை செய்வதில் எங்களுக்கு மிகவும் ஆவல் உண்டு. எமது பெற்றோரும் இது விஷயமாக எங்களுக்குத் தேவையான உதவி புரிந்து வருகிறார்கள். சில தருணங்களில் அவர்களும் எங்களுடன் வந்து வேலை செய்வது வழக்கம்.

2. எங்கள் வீடு வீதிக்குச் சிறிது உள்ளடங்கி யிருப்பதால், வீட்டின் முன்புறத்திலுள்ள காலியான இடத்தைப் பண்படுத்தி, ஒரு புஷ்பத் தோட்டம் அமைத்துள்ளோம். அங்கு

ரோஜா, மல்லிகை, செவ்வந்தி, அரளி, பாரி
ஜாதம், மந்தாரை முதலிய புஷ்பச் செடிகளை
வளர்த்து வருகிறோம். மண் தொட்டிகள் சில
வற்றில் 'குரோட்டன்ஸ்' செடி வகைகளைப்
பயிராக்கியும், வீட்டின் தலைவாயிலில் சம்பங்கிக்
கொடிகளைப் படரவிட்டும் இருக்கிறோம். தரை
யைக் கொத்திக் கொடுத்து, களைகள் பிடுங்கி,
காலா காலத்தில் தண்ணீர் பாய்ச்சி, தோட்டத்
தைக் கண்ணுங்கருத்துமாகக் கவனித்து வரு
கிறோம். குப்பை செத்தைகள் சேராமல் தோட்
டத்தைச் சுத்தமாக வைத்தும், பார்ப்பதற்கு
அழகு தரும்படி செடிகளை வரிசை வரிசை
யாய்ப் பயிர் செய்தும் வருகிறோம்.

3. எங்களது பூந்தோட்டம் பார்வைக்கு
மிக நேர்த்தியாகவும் அழகாகவும் இருக்கிறது.
இதில் மலரும் மலர்களை எனது தாயும், சகோ
தரியும் தலையில் சூட்டிக் கொள்ளவும், மாலை
யாகத் தொடுத்துப் படங்களை அலங்கரிக்கவும்
உபயோகிக்கிறார்கள். செழுமையான செடி
கொடிகளின் பசுமையும், மலர்களின் பலவித
நிறமும் மணமும் எங்களுக்கு மகிழ்ச்சி யளிக்
கின்றன.

4. எங்கள் வீட்டின் புறக்கடையில் ஒரு
கிணறு இருக்கின்றது. அதைச் சுற்றிலுமுள்ள

தரையை முதலில் மண் வெட்டியால் கொத்தி, மண் கட்டிகளை உடைத்துச் சமப்படுத்தினோம். பிறகு பாத்திகள் கட்டியும், குழிகள் தோண்டியும், அவைகளில் வீட்டுக்கு வேண்டிய அரைக் கீரை, வெண்டை, அவரை, பீர்க்கு, பாகல், புடல், மிளகாய் முதலிய காய்கறிச் செடிகளைப் பயிர் செய்து வருகிறோம். வாழை, எலுமிச்சை, கருவேப்பிலை முதலிய சில மரங்களையும் வேலி ஓரத்தில் வளர்த்து வருகிறோம்.

5. குழந்தைச் செடிகள் சிறு விதைகளிலிருந்து முளைத்து வளர்ந்து வருவதை நாங்கள் பார்க்கும் பொழுது எங்களுக்கு அளவில்லாத ஆனந்தம் உண்டாகிறது. பாடசாலையில் இயற்கைப்பாடம் சம்பந்தமாகப் படிக்கும் விஷயங்களை நாங்கள் எங்கள் தோட்டத்தில் நேரில் கண்டு அறிகிறோம். தோட்டத்தில் வரும் தவளைகள், பட்சிகள், புழுப்பூச்சிகள் முதலிய ஜந்துக்களைப் பற்றியும் கவனித்து அறிகிறோம். எங்கள் சிறு தோட்டம் எத்தனையோ விதங்களில் சாதகமாயிருக்கிறது.

பயிற்சி

(i) பின்வரும் சொற்களை உபயோகித்து வாக்கியங்கள் அமைத்து எழுது :

ஓய்வு நேரம், ஆவல், காலாகாலத்தில், கண்ணுங்கருத்துமாக, அலங்காரம், புறக்கடை.

(ii) பூர்த்தி செய் :

புஷ்பங்களை —— தொடுத்துப் படங்களை —— உபயோகிக்கிறோம்.

செடிகளை ——— பயிர்செய்து வருகிறோம்.

தரையை முதலில் —— கொத்தி மண் கட்டிகளைச் சமப்படுத்தினோம்.

(iii) பின்வரும் ஒவ்வொரு இனத்திலும் இன்னும் இரண்டு பொருள்கள் எழுதுக :

ரோஜா, மல்லிகை, அரளி, ——, ——.

அவரை, வெண்டை, புடல், ——, ——.

ஆடு, மாடு, நாய், ——, ——.

காகம், கோழி, புறா, ——, ——.

(iv) கமலம், —ஒரு பெண்ணின் பெயர். ரோஜா: மிளகாய், தவளை, காகம், தோட்டம் இவை பொருள்களின் பெயர்கள். பொருளின் பெயரைக் குறிக்கும் சொல் பெயர்ச்சொல்.

எழுது, வருகிறார், போ, படி, — இச் சொற்கள் ஒவ்வொன்றும் ஒரு செய்கை அல்லது வினையைக் காட்டுவதால் வினைச் சொல் எனப்படும்.

இந்தப் பாடத்திலிருந்து 12 பெயர்ச்சொற்களை எடுத்து எழுது. 8 வினைச்சொற்களை எடுத்து எழுது.

---

## 7. கடிதம் I

இந்தக் கடிதத்தைப் படித்தறி :

1. இந்தக் கடிதம் எழுதியவர் யார் ?
2. யாருக்கு எழுதியது ?
3. எதற்காக எழுதியது ?

4. எந்த ஊரிலிருந்து எழுதியது?

5. கடிதம் எழுதுவதில் (i) எழுதுபவனின் விலாசம் (ii) தேதி (iii) ஆரம்பம் (iv) விஷயம் (v) முடிவு (vi) கையெழுத்து (vii) சேரவேண்டிய விலாசம் இவைகளை எங்கெங்கே எழுதவேண்டுமென்று தெரிந்துகொள்.

40, கீழ ஆண்டார் வீதி,
திருச்சி,
21—10—1939.

அன்பார்ந்த ஷண்முகம்,

இங்கு யாவரும் சுகம். அவ்விடத்திய க்ஷேமத்தைப்பற்றி எழுத வேண்டுகிறேன்.

இந்த மாதம் கட்டி முடிந்த எங்கள் புதிய வீட்டுக்கு வருகிற ஞாயிற்றுக்கிழமை குடி போகிறோம். அது சம்பந்தமாக அன்று பகல் 11 மணிக்கு நடைபெறும் விருந்திற்கு வந்து சேரவும். வரும்போது உன் தங்கை நீலாவையும் அழைத்து வா.

உனது அன்பார்ந்த நண்பன்,
தி. நடேசன்.

| |
|---|
| விலாசம் :<br>ஸ்ரீ வி. ஷண்முகம்,<br>21, சித்திரை வீதி,<br>ஸ்ரீரங்கம். |

# 8. கதையில் விட்ட சொற்களைப் பூர்த்தி செய்

அடியிற்கண்ட கதையிலிருந்து இந்த வார்த்தைகள் எடுத்துத் தனியாக அச்சிடப்பட்டிருக்கின்றன. காலி யிடங்களில் சரியானவார்த்தையை உன்னால் போடமுடி யுமா வென்று பார். பிறகு கதைக்குப் பொருத்தமான ஒரு பெயர் கொடு.

| | | |
|---|---|---|
| மூழ்கி | அநியாயம் | காயமடைந்தன |
| தவறு | அன்பான | தைரியமுள்ள |
| கற்கள் | ஆனந்தம் | விட்டெறிந்து |
| கொடுமை | குளக்கரையில் | ஆலோசியாமல் |

சில பிள்ளைகள் ஒரு — நின்றுகொண்டு கற்களைத் தண்ணீரின் மேல் சறுக்கியோடும்படி ——— விளையாடிக் கொண்டிருந்தார்கள். குளத்திலிருந்த தவளைகள் பயந்து கல்லுக்குத் தப்பும் பொருட்டு தண்ணீரில் ——— ஒளிந்து கொள்ளப் பார்த்தன. ஆனால், ஒன்றன்பின் ஒன்றாய் அநேகம்—மேலும் மேலும் வந்துகொண்டிருந்தன. அதனால் தவளைகள் கல்லடிபட்டுக் —; இரண்டொன்று இறந்தும் போயின.

அப்பொழுது அவைகளில்—தவளை ஒன்று, தன் தலை யைத் தண்ணீருக்குமேல் நீட்டிக்கொண்டு, " — பிள்ளை களே! அறியாத்தன்மையால் என்ன — செய்கிறீர்கள். இந்தக் கல்லெறி விளையாட்டு உங்களுக்கு —; எங்களுக்கு ஆபத்து. இது — அல்லவா ?" என்றது.

அதைக் கேட்ட பிள்ளைகள், — தாங்கள் செய்தது— என்று உணர்ந்து, எடுத்த கற்களைக் கீழே போட்டுவிட் டார்கள்.

மொழிப் பயிற்சி

1. எதிர்ப்பதங்கள் தெரிந்துகொள் :

சரி × தவறு ; நியாயம் × அநியாயம் ; தைரியம் × அதைரியம்.

2. இந்தக் கதை நிஜமாயிருக்குமா ? காரணத்துடன் சொல். உனக்குத் தெரிந்த வேறு மூன்று கட்டுக்கதைகளின் பெயர்களைச் சொல்.

## 9. நாளை நாளை

1. நாளை நாளை என்னாதே
நாளை வீணில் போக்காதே
நாளை செய்யும் காரியத்தை
நலமாய் இன்றே முடிப்பாயே

2. இன்று செய்யும் காரியத்தை
நாளை என்றே தள்ளாதே
நாளை எங்கே போவோமோ
நாளை என்ன நேரிடுமோ ?

பயிற்சி

1. இந்தப் பாட்டை மனப்பாடம் செய்.

2. இந்தப் பாட்டின் கருத்தைச் சொந்த வாக்கியங்களில் சொல்.

---

# 10. மிருகக்காட்சி சாலை

விடை கண்டுபிடி:

1. மிருகக் காட்சி சாலையில் பார்வதியும் நடேசனும் என்னென்ன மிருகங்கள் பார்த்தார்கள்? அவைகளைப் பெரியதிலிருந்து சிறியது வரை வரிசைப்படுத்தி எழுது.
2. ஆண் சிங்கத்திற்கும் பெண் சிங்கத்திற்கும் பார்வையில் என்ன வித்தியாசம்?
3. ஒட்டகத்தைப்போல் தோன்றும் மற்றொரு மிருகம் யாது? பட்சி யாது?
4. படத்தில் காங்கருவின் குட்டி எங்கே இருக்கிறது?
5. புலி, கரடி, சிங்கம், ஒட்டைச்சிவிங்கி இவைகள் ஒவ்வொன்றையும் வர்ணிக்கும் சொற்கள் எவை?

நடேசன்: இன்று பள்ளிக்கூடமில்லை. மிருகக் காட்சி சாலையைப் போய்ப் பார்த்துவருவோம். பார்வதி! நீயும் வருகிறாயா?

பார்வதி: மிருகக் காட்சி சாலை என்றால் என்ன, அண்ணா?

நடேசன்: பல காட்டு மிருகங்களையும், விநோதப் பிராணிகளையும் சேகரித்துவைத்து வளர்க்கும் இடம் மிருகக்காட்சி சாலை. ஜனங்கள் அங்கே சென்று அவைகளைக் கண்டு களிக்கத் துரைத்தனத்தார் இதை ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

பார்வதி: சரி, நானும் வருகிறேன். மிக்க வேடிக்கையாக இருக்கும்.

[இருவரும் நல்ல உடை உடுத்திக்கொண்டு மிருகக் காட்சி சாலைக்குச் செல்லுகிறார்கள்.]

நடேசன்: இதுதான் மிருகக்காட்சித் தோட்டம். உள்ளே சென்று இங்குள்ள பிராணிகளைப் பார்ப்போம்.

பார்வதி: இந்தக் கூண்டிலிருந்து பயங்கரமாகப் பார்க்கிறதே, இது என்ன?

நடேசன்: அதுதான் வேங்கைப் புலி. அதன் மேல் மஞ்சளும் கறுப்புமான வரிகள் எவ்வளவு அழகாக இருக்கின்றன பார்.

பார்வதி: இது துஷ்ட மிருகம் போலிருக்கிறது. அதனால்தான் இரும்புக் கூண்டில் அடைத்து வைத்திருக்கிறார்களோ?

நடேசன்: ஆமாம். இதோ அடுத்த கூண்டில் உள்ள சிங்கங்களைப்பார். சிங்கம் புலியை விடப் பெரியது; பலமுள்ளது.



பார்வதி: இவைகளைப் பார்க்கும்போதே பயமாக இருக்கின்றது.

நடேசன் : ஆண் சிங்கத்திற்குப் பிடரி மயிர் இருக்கிறது. படுத்திருப்பது பெண் சிங்கம். அதற்குப் பிடரி மயிர் இல்லை, பார்.

பார்வதி : அதோ கறுப்பாக மயிர் அடர்ந்து இருக்கும் மிருகம் என்ன ?



நடேசன் : அது தெரியாதா, அதுதான் கரடி. முன்னொரு நாள் ஒருவன் கரடியைப் பிடித்துக் கொண்டு வந்து வேடிக்கை காட்டினனே ! நீ பார்க்கவில்லையா ?

பார்வதி : வீட்டிற்குள் அலுவலாக இருந்து விட்டேன் ; பார்க்கவில்லை. அதோ பார், யானை. நம் ஊர்க் கோவிலில் கூட யானை இருக்கிறதே. அந்த மரத்தடியில், கழுத்தும் உடலும் கோணலாக இருக்கும் பிராணி யாது ?

நடேசன் : அதுதான் ஒட்டகம். அதன் திமிலைப்பார். ஒட்டகத்தைப்போல் இன்னொரு

மிருகம் சற்றுத் தூரத்தில் நிற்கிறது, பார். அது ஒட்டைச்சிவிங்கி.

பார்வதி: ஒட்டகத்தைப்போல் நீண்ட கழுத்தும் சிவிங்கியைப் போல், தேகத்தில் குறுக்கு நெடுக்காகக் கோடுகளும் இருப்பதால் இந்தப் பிராணிக்கு ஒட்டைச்சிவிங்கி என்று பெயர் வந்தது அல்லவா?



நடேசன்: அது சரி. ஒட்டைச் சிவிங்கி நாக்கை நீட்டி மரத்தின் உயரத்திலுள்ள தழைகளையும், இலைகளையும் இழுத்துத் தின்பதைக் கவனி.

பார்வதி: அதோ ஒரு மிருகம் தாவித் தாவி ஓடுகிறதே. அதன் வயிற்றில் ஒரு பையிலிருந்து ஒரு குட்டி எட்டிப் பார்க்கிறது. அது என்ன?

நடேசன்: அதுதான் காங்கரு. அந்தப் பிராணி, நமது நாட்டில் வசிப்பதேயில்லை. அதன்

முன்னங்கால்கள் குட்டையாகவும், பின்னங் கால்கள் நீண்டும், மடிந்தும் இருப்பதால் தாவித் தாவி ஓடுகிறது. அதோ நிற்



காங்கரு

கும் பெரிய பறவை தீப் பறவை அல்லது நெருப்புக் கோழி எனப்படும்.

**பார்வதி :** அதன் கழுத்தும் ஒட்டகையின் கழுத்தைப் போலிருக்கிறது.

**நடேசன் :** ஆம். ஒட்டகத்தைப்போல் கழுத்து நீண்டிருப்பதால் இதை ஒட்டகப் பக்ஷி என்றும் சொல்வார்கள். இதன் கால்க

ளில் அகன்ற இரண்டு விரல்கள் இருப்பத ஞல் மணலில் வேகமாக ஓடும்.

பார்வதி: அண்ணு! நேரமாகிவிட்டது. இன்னும் பல மிருகங்கள் இருக்கின்றனவே. மான்கள், மலைப்பாம்பு, முதலை, காண்டா மிருகம், பஞ்சவர்ணக் கிளி முதலிய பல விநோத ஜந்துக்களையும் எப்பொழுது பார்ப்பது?

நடேசன்: இன்று நாம் அநேக விஷயங்களைத் தெரிந்துகொண்டோம். மறுபடியும் இன்னெரு நாள் வந்து பார்க்கலாம். இப்பொழுது வீட்டுக்குத் திரும்புவோம்.

மொழிப் பயிற்சி

பஞ்ச வர்ணங்களாவன: சிவப்பு, மஞ்சள், வெண்மை, கறுப்பு, பச்சை.

(i) ஒவ்வொரு வரிசைச் சொற்களிலும் அந்த வரிசைக்குப் பொருத்தமில்லாத சொல் ஒன்று இருக்கிறது. அதைக் கண்டுபிடித்து அடித்துவிடு.

1. நாய், பசு, குதிரை, புலி, பூனை, (வீட்டு மிருகங்கள்.)
2. சிங்கம், ஆடு, யானை, கரடி, நரி. (காட்டு மிருகங்கள்.)
3. இலை, பூ, காய், வேர், காகிதம்.
4. வருஷம், தேதி, வீசை, மாதம், நாள்.

(ii) 1. அண்ணு! நேரமாகிவிட்டது. இன்னும் பல மிருகங்கள் இருக்கின்றனவே. மான், மலைப்பாம்பு, முதலை, காண்டா மிருகம், பஞ்சவர்ணக் கிளி முதலிய பல விநோத ஜந்துக்களையும் எப்பொழுது பார்ப்பது?

இந்த வாக்கியங்களிலுள்ள நிறுத்தல் குறிகளை உற்று நோக்கு. முற்றுப்புள்ளியைத் தவிர வேறு எவ்விதக் குறிகள் இருக்கின்றன ?

2. இது கால்புள்ளி அடையாளம். ஒரே விதமான பலசொற்கள் தொடர்ந்து நிற்கும்போது ஒன்றுக்கு ஒன்று சிறிது நேரம் நிறுத்தி வாசிக்க அடையாளமாகக் கால் புள்ளி அல்லது கமா புள்ளி போடுவது வழக்கம்.

கீழுள்ள வாக்கியத்தில் கால் புள்ளி, முற்றுப் புள்ளிவை : பாத்திகள் கட்டி குழிகள் தோண்டி அவைகளில் அரைக்கீரை வெண்டை அவரை கொத் தவரை பீர்க்கு பாகல் புடல் மிளகாய் முதலிய காய் கறிச் செடிகளைப் பயிர் செய்தோம்

3· அண்ணு!
ஐயோ பாவம்!
ஆ! என்ன ஆச்சரியம்!

இது! விளிக்குறி அல்லது ஆச்சரியக் குறி எனப்படும்.

(iii) படத்தில் உள்ளவை எந்தெந்த மிருகங்களின் பாதங்கள் ?






# 11. விலை யென்ன?

படித்து ஐந்து நிமிஷத்திற்குள் விடை யெழுது :

1. இந்த விளையாட்டுச் சாமான்களில் எது குறைந்த விலை யுள்ளது?

2. எது அதிக விலையுள்ளது?

3. நாலணாவுக்கு மேல் விலையுள்ள சாமான்கள் எவை?

4. நாலணாவுக்குக் குறைந்த விலையுள்ள சாமான் எது?

5. மோட்டாரைவிட ரயில்வண்டியின் விலை எத்தனை அணா அதிகம்?

6. ஒரே விலையுள்ள சாமான்கள் எவை?

7. கிட்டியின் விலையைவிடப் பந்தின் விலை எவ்வளவு குறைவு?

8. எட்டணு விலையுள்ள சாமான் எது?

சர்க்கரை விலை வீசை ஆறு அணுவிலிருந்து எட்டு அணுவாக ஏறிவிட்டது.

அரிசி விலை மூட்டை பத்து ரூபாயிலிருந்து ஒன்பது ரூபாயாக இறங்கிவிட்டது.

உப்பு படி ஒன்றரை அணு விற்றது; இப்பொழுது ஒன்றேகால் அணு. ஆதலால் உப்பு மலிவாக விற்கிறது.

முந்திரிப்பருப்பு விலை முன்பு வீசை ஒரு ரூபாய். இப்பொழுது ஒன்றேகால் ரூபாய். ஆதலால், அது கிராக்கியாக விற்கிறது.

மொழிப் பயிற்சி

1. சாதாரண வாக்கியத்தின் முடிவில் முற்றுப் புள்ளி போடுவது வழக்கம் என்று ஏற்கனவே படித்தோம். கேள்வி வாக்கியங்களில் இந்தக் குறி ? இடவேண்டும். இதற்குக் கேள்விக் குறி அல்லது வினுக்குறி என்று பெயர்.

2. எது, எவை, என்ன, எத்தனை, எவ்வளவு, யார்— இவை ஒவ்வொன்றையும் உபயோகித்து ஒவ்வொரு கேள்வி எழுது.

3. எதிர்ப் பதங்கள் தெரிந்துகொள்: அதிகம்Xகுறைவு; ஏறுXஇறங்கு; கிராக்கிXமலிவு.

———

# 12. மரியாதை முறை

படித்தறிந்து சொல் :

1. பெரியோர்களைக் கண்டால் நாம் என்ன செய்ய வேண்டும் ?

2. இப்பாடத்தில் வந்துள்ள பழமொழிகள் யாவை?

3. நாலாவது பாரா எதைப்பற்றிச் சொல்லுகிறது ?

4. சிறுவர்களிடத்தும் வேலையாட்களிடத்தும் நாம் நடந்து கொள்ளவேண்டிய முறை எந்தப் பாராவில் சொல்லியிருக்கிறது ?

5. 'முக மலர்ச்சி'; 'அடிப்படைக் குணம்'—இவை வந்த வாக்கியங்களைக் கண்டுபிடி.

1. உனது தினசரி வாழ்க்கையில் பெற்ேறோர், உறவினர், நண்பர், அயலார் முதலிய பலருடன் பழகி வருகிறாய். அவ்வாறு பழகுவதில் சரியான மரியாதை முறைகளை அறிந்து நடந்துகொள்ள வேண்டியது அவசியம். ஒருவருக்கொருவர் உள்ள பிரியத்தைக் காட்டுவதே மரியாதை என்று சொல்லலாம். நல்ல மரியாதைக் குணமுள்ளவர்களை யாவரும் விரும்புவார்கள். அவர்களைப் பிறரும் மரியாதையுடன் நடத்துவார்கள். 'மரியாதை கொடுத்து மரியாதை வாங்கு' என்பது ஒரு பழமொழி. மரியாதை முறைகளில் பழகியவர்களே வாழ்க்கையில் பெருமையும் புகழும் அடைகிறார்கள்.

2. தாயார், தகப்பனார், ஆசிரியர், மேலதிகாரி முதலியவர்கள், வயதிலும் அறிவிலும் உனக்குப் பெரியவர்கள். இவர்களிடத்தில் வணக்கமும் மரியாதையும் காட்டுதல் வேண்டும்.

அவர்களைக் கண்டால் எழுந்து வணக்கம் செய்து, அவர்கள் ஆசனத்திலமர்ந்த பிறகே நீ உட்காரவேண்டும். ஒரே ஆசனம் இருந்தால் அதை அவருக்களித்துவிட்டு, நீ நின்று இருப்பது மரியாதையாகும். அவர்கள் பேசும்பொழுது குறுக்காகத் தடுத்துப் பேசுவதும், எதிர்த்துப் பேசுவதும் மரியாதைக் குறைவாகும். பெரியோர்களை 'நீ' என்று அழைக்காமல் 'நீங்கள்' அல்லது 'தாங்கள்' என்று அழைக்க வேண்டும். எப்பொழுதும் அவர்கள் உன்னை மெச்சிக்கொள்ளும்படி நீ நடந்துகொள்வது நலம்.

3. பொதுவாகப் பிறரிடத்தில் நாம் ஒரு பொருளை வேண்டும்பொழுது நயமாகக் கேட்பதும், அவர்கள் செய்யும் உதவிக்காக வந்தனம் சொல்லுவதும் மரியாதை முறைகளாம். நமக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களைப்பற்றிப் பிறர் பேசுகையில் ஒளிமறைவாக இருந்து ஒட்டுக்கேட்டலும், ஒருவரைப்பற்றி அவர் நேரில் இல்லாத சமயத்தில் அவதூறு பேசுதலும் தகாத செயல்கள்.

4. பாடசாலைத் தோழர்களோடும், நண்பர்களோடும் மரியாதையாகப் பழகுவதுதான் நீங்கள் ஒவ்வொருவரும் முதலில் கற்றுக் கொள்ளவேண்டியது. அவர்களைக் கோபித்து வைதலும், பரிகாசப் பெயரிட்டு அழைப்பதும் அவர்களைப்பற்றிக் கோள் சொல்லுவதும் சரி

யல்ல. விளையாட்டுக் காலங்களில் பாரபட்சமின்றிப் பெருந்தன்மையாக நடந்துகொள்ளல் வேண்டும்.

5. வீதிகளில் பெரியோர்களுக்கும், பெண்பாலருக்கும், சுமை தூக்கி வருபவருக்கும் வழி விட்டு நீ ஒதுங்கிச் செல்வதே சரி. அதே விதம் ரயில் முதலிய வண்டிகளிலும், திரளான கூட்டங்களிலும், பந்தி போஜனங்களிலும் அவர்களுக்கு இடம் கொடுத்துப் பிறகு நீ அமருவதுதான் நல்ல முறை. பலருடன் உண்ணும்பொழுது, பிறருக்கு அருவருப்பு உண்டாகாதபடி நடந்து கொள்ளவேண்டும்.

6. உன்னை விடச் சிறியவர்களிடத்தும் வேலைக்காரர்களிடத்தும் அதிகாரத்துடன், நடந்துகொள்ளாமல், அன்பாகவும் மரியாதையாகவும் பழகுதல் உனது கடமையாகும். 'கீழோராயினும் தாழ உரை.' அவர்களிடம் கடுஞ்சொற்களை உபயோகிக்காமல் நயமாகப் பேசுவதால் அன்பு பலப்படும்.

7. அனைவரும் விரும்பும்படியான நடை, உடை, ஒழுக்கம் இவைகளைப் பழக்கிக்கொள், எப்பொழுதும், உடல், உடைகளில் சுத்தமாக இருப்பதுடன், முக மலர்ச்சியுடன் இருக்க வேண்டும். பிறர் மனம் நோகாமல் நடக்கப் பழகுவதே மரியாதை முறைகளின் அடிப்படைக் குணம். மரியாதைக் குணமுள்ளவர்கள் எப்பொழுதும், சுயநலத்தை விட்டுப் பிறர்

நலத்தை நாடுவர். பிறர் உன்னிடத்தில் எவ்வாறு பழகவேண்டுமென்று விரும்புகிருயோ, அவ்வாறே நீயும் அவர்களிடம் நடந்துகொள். ஒவ்வொரு சமயத்திலும் இதேவிதம் யோசித்து நீ நடந்துவந்தால் அதுவே மரியாதை முறையாகும்.

மோழிப் பயிற்சி

(i) சோல் விளக்கம்:—உறவினர் = சொந்தக்காரர். அயலார் = அக்கம்பக்கத்திலுள்ளவர். ஆசனம் = உட்காரும் பீடம். அவதூறு = பழி. பாரபட்சம் = ஓர வஞ்சகம். சுயநலம் = தன்னலம். சுமை = பளுவான சாமான். அடிப்படை = அஸ்திவாரம். பெண்பாலர் = ஸ்திரீகள். தோழர் = நண்பர், சிநேகிதர்.

(ii) பின் வரும் வார்த்தைகளில் சாதாரண அர்த்தமுள்ள சொற்களையும் அதற்கு எதிரான அர்த்தமுள்ள சொற்களையும் ஜோடியாக எடுத்து எழுது.

(உதாரணம்) நல்லXகெட்ட.

சரியான, மரியாதை. அநாவசியம், சிறியோர், கடுஞ்சொல், பிறநலம், சுத்தம், அவமரியாதை, பெரியோர், சுயநலம், தப்பான, அசுத்தம், அவசியம், இன்சொல்.

(iii) பின்வரும் வாக்கியங்களை வாசித்துத் தப்பான மரியாதை முறைகளுக்கு எதிராகX இக்குறி யிடு:—

1. ராமன் தாயாரை எதிர்த்துப் பேசினன்.

2. சீதை வேலைக்காரியுடன் அன்பாகப் பேசினுள்.

3. புகை வண்டியில் முடவன் ஒருவனுக்கு இடங் கொடாமல் வேலு உட்கார்ந்துகொண்டான்.

4. ராமா! தயவுசெய்து உன் புத்தகத்தைக் கொடு.

5. கால் தூசியை வெளியில் தட்டாமல் வேலைக்காரன் உள்ளே நுழைந்தான்.

(iv) இப் பதங்கள் வைத்து ஓரோர் வாக்கியம் எழுது: குறுக்காக, எதிர்த்து, ஓட்டுக்கேட்டான், பாரபட்சம், பரிகாசம், அருவருப்பு.

(v) வீதி, வண்டி—இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருளையே குறிக்கின்றன. இப் பெயர்ச்சொற்கள் ஒருமை எண் எனப்படும்.

வீதிகள், வண்டிகள்—இவை ஒவ்வொன்றும் பல பொருள்களைக் குறிக்கின்றன. இப் பெயர்ச் சொற்கள் பன்மை எண் எனப்படும்.

1. இவைகளுக்குப் பன்மைச் சொற்கள் எழுது:— மனிதன், மாடு, மரம், புத்தகம், பழம், சிறுவன், பெரியவன், நண்பன், வேலைக்காரன்.

வினைச் சொற்களிலும் ஒருமை, பன்மை உண்டு.

(உதாரணம்) வந்தான்—ஒருமை
வந்தார்கள்—பன்மை.

2. கோடிட்ட சொற்களைப் பன்மைச் சொற்களாக மாற்றி வாக்கியத்தை எழுது:

<u>மாடு</u> புல்லை மேய்ந்தது.

<u>மயில்</u> அழகாக ஆடுகிறது.

<u>மரம்</u> காற்றினால் விழுந்தது.

<u>பையன்</u> விளையாடுகிறான்.

<u>அந்தப்</u> பெண் கோலம் போடுகிறாள்.

———

# 13. கடிதம்

முன்னமே 7-வது பாடத்தில் சிநேகிதனுக்கு எழுதும் கடிதத்தைப் படித்தீர்கள். அதன் முறைக்கும் இந்தக் கடிதத்தின் முறைக்கும் ஆரம்பப் பகுதியிலும், முடிவுப் பகுதியிலும், விலாசத்திலும் உள்ள வித்தியாசங்கள் என்ன?

டபீர் தெரு,
கும்பகோணம்.
16-6-1934.

ஐயா,

எனது தமக்கைக்கு நாளையதினம், எங்கள் வீட்டில் கல்யாணம். ஆதலால், இன்று முதல் ஒருவாரத்துக்குத் தயவு செய்து எனக்கு லீவு கொடுக்க வேண்டுகிறேன்.

இப்படி,
தங்கள் வணக்கமுள்ள
மாணாக்கன்,
தி. சுந்தரம்.

விலாசம்:—

உபாத்தியாயர் அவர்கள்,
4-வது வகுப்பு,
முனிசிபல் பாடசாலை,
கும்பகோணம்.

பயிற்சி

1. இந்தக் கடிதத்தில் லீவு எதற்காக வேண்டப்படுகிறது?

2. இதே விதம் நீ வேறு ஒரு லீவுக் கடிதம் எழுது. காரணம்: காய்ச்சலும் தலைவலியும்.

---

# 14. காகித உறை செய்தல்

நாம் எழுதும் கடிதங்களைக் காகித உறைகளில் போட்டு மேலே விலாசம் எழுதி அனுப்புகிறோம். அவ் வித உறை உனக்குச் செய்யத் தெரியுமா?

இந்தப் பாடத்தில் சொல்லிய முறைப்படி செய்து காகித உறைகள் தயாரிக்கக் கற்றுக்கொள்.

பன்னிரண்டு அங்குல நீளமும், ஒன்பது அங்குல அகலமு முள்ள ஒரு காகிதத்தை எடு. மேசை மேல் வை.




படம் 1.

முதற் படத்தைப் போல் க, ங, ச, ஞ என மூலைகளைக் குறித்துக் கொள். க-ஞ ஓரத்தில் 'ஞ'வி லிருந்து 5 அங்குல தூரத்தில் ஒரு புள்ளி வை. 'க' விலிருந்து 2 அங்குல தூரத்தில் ஒரு புள்ளி வை. அதே விதம் ங-ச ஓரத்தில் 'ச' வி லிருந்து 5 அங்குல தூரத்தில் ஒரு புள்ளி வை. 'ங' விலிருந்து 2 அங்குல தூரத்தில் ஒரு புள்ளி வை. இந்தப் புள்ளிகளைச் சேர்த்து இரண்டாவது படத்தில் காட்டியது போல் புள்ளிக் கோடுகள் இழு.


படம் 2.

க-ங ஓரத்தில் 'க' விலிருந்து ஒரு அங்குல தூரத்தில் ஒரு புள்ளியும், 'ங' விலிருந்து ஒரு அங்குல தூரத்தில் ஒரு புள்ளியும் வை, அதே விதம் ஞ-ச ஓரத்தில் 'ஞ' விலிருந்து ஒரு அங்குல தூரத்தில் ஒரு புள்ளியும், 'ச' விலிருந்து ஒரு அங்குல தூரத்தில் ஒரு புள்ளியும் வை. மூன்ருவது படத்தில் காட்டியதுபோல் புள்ளிக் கோடுகள் இழு.


படம் 3.

இப்பொழுது உன் காகிதம் ஒன்பது கட்டங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. இக் கட்டங்களுக்குப் படத்தில் காட்டியது போல் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9 என்று எண் இடு. புள்ளிக் கோடுகள் வழியாக 1, 3, 6, 4, கட்டங்களைக் கத்தரித்து எடுத்து விடு. நான்காவது படம்போல் இருக்கிறதா என்று கவனி.

'2' எண் இட்ட கட்டத்தைப் புள்ளிக்கோடு வரை 8-ன் மேல்மடி. அதே விதமே 5-வது கட்டத்தையும் 8-ன் மேல் மடி. 7-வது கட்டத்தையும் அதன் ஓரம் 9-ன் புள்ளிக்கோட்டைத் தொடும்படி மடி. பசையினுல் 7-வது கட்டத்தின் ஓரத்தை 2-ன் மேலும் 5-ன் மேலும் ஒட்டு. இப்பொழுது '9' இலக்கமிட்ட இடத்தில் மடித்து உறையின் வாயாக அமைத்துக்கொள். வேண்டுமானுல் அந்த '9'-ன் மூலைகளைச் சிறிது கத்தரிக்கலாம். இப்பொழுது சரி

யான உறை (கவர்) ஆகிவிட்டதல்லவா? இவ்விதம் நூற்றுக் கணக்கான உறைகள் செய்தால் அவைகளை விற்று நல்ல ஊதியம் பெறலாம்.



படம் 4.

கடைகளில் இம்மாதிரி பெரிய உறைகள் செய்து அவைகளில் சர்க்கரை, காப்பிக்கொட்டை முதலிய சாமான்கள் போட்டுக் கொடுப்பதைப் பார்த்திருப்பீர்கள்!

பயிற்சி

1. ஊசி நூல் கொண்டு ஒரு சிறு துணியைப் பையாகத் தை.

2. தபாலில் வந்த பழைய உறைகளைப் பிரித்து, பின்புறம் மாற்றி ஒட்டி, உறைகள் செய்.

---

# 15. தொழில் முயற்சி

படித்துக் கண்டுபிடி:

நாட்டில் செய்யக்கூடிய சாமான்கள் எத்தனை இப்பாட்டில் சொல்லியிருக்கின்றன? அவைகளை எடுத்தெழுது.

1. ஆயுதம் செய்வோம் நல்ல காகிதம் செய்வோம்
ஆலைகள் வைப்போம் கல்விச்சாலைகள் வைப்போம்
ஓயுதல் செய்யோம் தலை சாயுதல் செய்யோம்
உண்மைகள்சொல்வோம் பலவண்மைகள்செய்வோம்.

2. குடைகள் செய்வோம் உழு படைகள் செய்வோம்
கோணிகள் செய்வோம் இரும்பாணிகள் செய்வோம்

நடையும் பறப்பு முணர் வண்டிகள் செய்வோம்
ஞாலம் நடுங்க வருங் கப்பல்கள் செய்வோம்.

3. காவியஞ் செய்வோம் நல்ல காடுகள் வளர்ப்போம்
கலை வளர்ப்போம் கொல்லர் உலை வளர்ப்போம்
ஓவியஞ் செய்வோம் நல்ல ஊசிகள் செய்வோம்
உலகத் தொழிலனைத்தும் உவந்து செய்வோம்.

—பாரதியார்

மொழிப் பயிற்சி

அர்த்தம்:— ஆயுதம் = கருவிகள். ஆலைகள் = இயந்திர சாலைகள். ஓயுதல் = சும்மா இருத்தல். தலை சாயுதல் = தலை குனிதல். வண்மை = வளமை. உழுபடை = கலப்பை. பறப்பு = அவசரம். ஞாலம் = உலகம். காவியம் = பெரிய கதைப் புத்தகம். கலை = அறிவு நூல்கள். ஓவியம் = படம் வரைதல். உவந்து = மகிழ்ச்சி கொண்டு.

---

# 16. நல்ல பெண் காந்திமதி

படித்துக் கதை சொல்:

வகுப்பிலுள்ள பிள்ளைகள் எல்லோரும் இக் கதையை ஐந்து நிமிஷத்திற்குள் படிக்கவேண்டும். புத்தகத்தை மூடிக் கீழே வைத்துவிட்டு, முதலில் ஒருவன் கதையை ஆரம்பித்து ஒரு வாக்கியம் சொல்லவேண்டும். அடுத்தவன் அந்த வாக்கியத்தை ஒட்டித் தொடர்ந்தாற்போல் இன்னொரு வாக்கியம் சொல்ல வேண்டும். இப்படியே ஒவ்வொரு பையனும் வரிசையாகச் சொல்லிக் கதையை முடிக்கவேண்டும்.

முன்னொரு காலத்தில் காந்திமதி என்ற ஒரு சிறு பெண் இருந்தாள். அவள் மிக்க

அழகும், நல்ல குணமும் உள்ளவள். காந்தி மதியின் அன்னை இறந்தபின், அவள் தந்தை மறு கலியாணம் செய்துகொண்டார். சிறிய தாயாருக்கு மூன்று பெண்கள் பிறந்து இருந்த னர். அவள் தன் பெண்களை அருமை பெரு மையுடன் செல்வமாக வளர்த்து வந்தாள். சிற் றன்னை, காந்திமதிக்குப் பல வேலைகள் ஏவியும், நல்ல உடை, உணவு அளிக்காமலும் அவளைக் கஷ்டப்படுத்தினள். காந்திமதி எல்லாவற்றை யும் பொறுமையாகச் சகித்துவந்தாள்.

ஒருநாள் காந்திமதி தன் இளைய சகோதரி களுடன் குளத்திற்குச் சென்றாள். கரையில் தன் ஜோடுகளைக் கழற்றி வைத்துவிட்டுக் குளத்தில் நீராடினள். அப்பொழுது பருந்து ஒன்று பறந்து வந்து அவளுடைய ஜோடுகளில் ஒன் றைத் தூக்கிச் சென்றது. காந்திமதி கரையேறி னதும் தன் ஜோடு ஒன்றைக்காணமல் திகைத்து நின்றாள். பிறகு வீட்டிற்கு வந்ததும் இதை அறிந்த சிற்றன்னை அவளைக் கண்டித்தாள்.

அதே தினம் அந்த ஊர் அரசன் தனது மந்திரிகளுடன் அரண்மனை முற்றத்தில் உட் கார்ந்து தனது கலியாணத்தைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தான். அவன், "கடவுள் அரு ளால் கிடைக்கும் ஒரு பெண்ணையே நான் கலி

யாணம் செய்துகொள்ளுவேன்", என்று சொல்லி வாய் மூடுவதற்குள், அவன் காலடியில் ஓர் ஒற்றை ஜோடு தொப்பென்று விழுந்தது. அதைக் கண்ட எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். அப்பொழுது அரசன், "இது கடவுள் செயல். இந்த ஜோடு எந்தப் பெண்ணின் பாதத்துக்குப் பொருந்துகிறதோ, அந்தப் பெண்ணே எனக்கு மனைவியாவாள்" என்று சொன்னான்.

இந்தச் செய்தி ஊரெங்கும் பரவியது. அந்தப் பட்டணத்திலிருந்த பல பெண்களும் வந்து ஒவ்வொருவராக அந்த ஜோட்டைப் போட்டுப் பார்த்தார்கள். அது ஒருவர் காலுக்கும் பொருந்தவில்லை. கடைசியாகக் காந்திமதி போட்டுப் பார்த்ததும், அது அவள் காலுக்குச் சரியாக இருந்தது. அவளது அழகையும் குணத்தையும் மெச்சி, அரசன் காந்திமதியைக் கலியாணஞ் செய்துகொண்டான். காந்திமதி ராணியான பிறகு தனது சிற்றன்னைக்கும், அவளுடைய மக்களுக்கும் வேண்டிய பொருள் கொடுத்து நன்மையே செய்துவந்தாள்.

மொழிப் பயிற்சி

**1. கதை இட்டுக் கட்டு:**—இந்தக் கதையை சொன்னது போல வேறொரு புதிய கதையைப் பேருக்கு ஒரு வாக்கியமாகச் சொல்லி முடியுங்கள். இவ்விதம் நீங்களாகவே கதைகள் இட்டுக் கட்டிக் கதை சொல்லும் விளையாட்டு விளையாடலாம்.

ii. சிறு + அன்னை = சிற்றன்னை.

கரை, கறை—வித்தியாசம் தெரிந்து கொள்.

மெச்சி = புகழ்ந்து.

iii. அரசன், தந்தை, மனிதன்—இவை ஆண் இனத்தைக் குறிப்பதால் ஆண்பால் பெயர்கள்.

அரசி, தாயார், பெண்—இவை பெண் இனத்தைக் குறிப்பதால் பெண்பால் பெயர்கள்.

ஆண்பால் பெயர்களும் பெண்பால் பெயர்களும் இவைகளில் கலந்திருக்கின்றன. ஒவ்வொரு ஆண்பால் பெயரையும் எடுத்தெழுதி, அதற்கு நேராகப் பெண்பால் பெயரையும் எழுது.

| | | |
|---|---|---|
| குறவன் | ஒருவன் | வேலைக்காரன் |
| இடைச்சி | இராணி | சகோதரி |
| குறத்தி | சிறுமி | உபாத்தியாயினி |
| இடையன் | குருடி | பிச்சைக்காரன் |
| ஒருத்தி | சிறுவன் | நல்லவன் |
| பேரன் | சகோதரன் | பேத்தி |
| குருடன் | பிச்சைக்காரி | இராஜா |
| நல்லவள் | உபாத்தியாயர் | வேலைக்காரி |

வினைச் சொற்களுக்கும் பால் உண்டு.

உதாரணம் :—வந்தான் (ஆண்பால்)
வந்தாள் (பெண்பால்)

தடித்த எழுத்தில் அச்சிட்டுள்ள சொற்களின் பாலை மாற்றி வாக்கியத்தை எழுது.

**இடையன்** பால் **விற்றான்**.
**சிறுமி** பாடு**கிறாள்**.
**வண்ணாத்தி** துணி தோய்க்**கிறாள்**.
**ராஜா** பட்டமளித்**தார்**.
**எருது** தீனி தின்**றது**.

# 17. பத்திரிகைச் செய்தி I

24—10—1939 சுதேசமித்திரன் தினசரிப் பத்திரிகையில் கீழ்க்கண்ட சமாசாரம் பிரசுரமாகி யிருந்தது.

'நமது நிருபர்,'—என்பவர் சுதேசமித்திரன் பத்திரிகையின் சொந்த நிருபர். அவர் கோயமுத்தூரில் இருப்பவர். அவ்வூரிலும் பக்கத்து ஊர்களிலும் நடக்கும் விஷயங்களைப் பற்றி சுதேசமித்திரன் பத்திரிகைக்கு எழுதுவார்.

இந்த விஷயத்தை மூன்று நிமிஷத்திற்குள் படித்து, பிறகு விடை சொல்.

1. கண்காட்சி நடத்திய சங்கத்தின் பெயர் என்ன? எந்த விடத்தில் கண் காட்சி நடந்தது?

2. காரியதரிசி சொன்ன இரண்டு விஷயங்கள் எவை?

3. காட்சியைத் திறந்து வைக்க முதலில் யாரை அழைத்திருந்தார்கள்?

4. பரிசுகளைக் கொடுத்தது யார்?

5. இந்தச் செய்தியில் வந்துள்ள ஆங்கிலப் பதங்கள் எவை?

6. உன் ஊரில் ஏதேனும் கண்காட்சி நடந்ததுண்டா? இம்மாதிரியே அக்காட்சியை வர்ணித்து மூன்று பாராக்கள் எழுது.

## கோவை கால்நடைக் கண்காட்சித் திறப்பு விழா.

ஜீவஹிம்ஸை நிவாரண சங்கத்தின் ஆதரவின் கீழ் நடத்தப் படும் 17-வது வருஷத்திய கால் நடைக் கண் காட்சியும் பந்தயங் களும் நேற்று காரனேஷன் பார்க்கில் நடை பெற்றன. கலெக்டரும், சங்கத் தலைவருமான மிஸ்டர் டி. டி. வாரன் காட்சியைத் திறந்துவைத்தார்.

சங்கக்காரியதரிசி திவான் பஹதூர் சி. வி. வெங்கடரமணய்யங்கார், மிஸ்டர் வாரனை காட்சியைத் திறந்து வைக்கச் சொல்லும்பொழுது இம் மாதிரிக் காட்சி ஜீவஹிம்ஸை நிவாரணத்திற்கான பிரசாரவேலையாகுமென்றும், இதற்காகப் பொது ஜனங்களிடமிருந்து அநுதாபமும் நன்கொடைகளும் வந்திருக்கின்றனவென்றுங் கூறினர்.

மிஸ்டர் வாரன் காட்சியைத் திறந்து வைக்கும்பொழுது பின் வருமாறு பேசினர் :—இந்தக் காட்சியைத் திறந்து வைக்கப் பிரதம மந்திரி கனம் சி. ராஜகோபாலாசாரியார் அழைக்கப் பட்டிருந்தார். ஆனல் நேற்று அவர் டெலிபோன் மூலம் தமக்குச் சென்னையில் அலுவல்கள் அதிகமாயிருப்பதால் தாம் வர முடியாததைக் குறித்து வருந்தினர். சங்கத்தின் நோக்கங்களைப் பூர்த்தி செய்ய நான் பொது ஜனங்களை எந்தக் குறைகளையும் ஆலோசனைகளையும் சங்கத்தின் கமிட்டி முன்பு கொண்டுவரும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். கமிட்டியார் அவைகளைக் கேட்டு நடக்க எப்பொழுதும் தயாராக இருக்கிறார்கள்.

பிறகு காட்சி திறந்து வைக்கப்பட்டது. கலெக்டர் முதலியோர் காட்சியைச் சுற்றிப் பார்த்தார்கள் பிறகு ரேக்ளா, குதிரை முதலிய பந்தயங்கள் விடப்பட்டன.

மிஸஸ் வாரன் பரிசுகளை வழங்கினர்.

—(நமது நிரூபர்)

---

# 18. இந்தியச் சிறுவர்கள்

படித்து விடை கண்டுபிடி :

1. இந்தப் பாடத்தில் எத்தனை சிறுவர்கள் தங்களைப் பற்றிச் சொல்லுகிருர்கள் ? எவன் அதிகமாகப் பேசியிருக்கிறான் ?

2. ஆருவது பாராவில் கூறப்பட்ட ஐந்து பெரியோர்களின் பெயரை எழுது.

3. மைசூர்ச்சிறுவன் சொல்வதைப் படி. புத்தகத்தை மூடு. படித்தவைகளைச் சொல். பிறகு புத்தகத்தைத் திறந்து பார். எதைச் சொல்ல மறந்துவிட்டாய் என்று கவனி. மறுபடியும் புத்தகத்தை மூடி, மற்றொரு முறை சொல்லிப் பார். (இவ்விதம் மனனஞ் செய்து படிப்பது நல்ல முறை. இம்மாதிரி இதர பாடங்களையும் படிக்கப் பழகிக்கொள்.)

4. சிவாஜியைப்பற்றி எந்தப் பராவில் சொல்லியிருக்கிறது?

5. உன்னைப் பஞ்சாப் சிறுவனாக நினைத்துக்கொள். அந்த மாகாணத்தைப்பற்றி நீ என்ன சொல்வாய்? வகுப்பு முன் வந்து சொல்.

1. மலையாளச் சிறுவன்,—நான் மலையாளத்தில் பிறந்து வளர்ந்து மலையாள மொழி பேசும் ஒரு சிறுவன். என் பெயர் ராமன் நாயர். எங்கள் நாடு மேற்கு மலைத் தொடருக்கும், அரபிக் கடலுக்கும் இடையில் உள்ளது. அதைக் கேரள தேசமென்றும் சொல்லுவார்கள். வைகாசி, ஆனி, ஆடி மாதங்களில் ஏராளமான மழை பொழிவதால் கேரள தேசம் நீர்வளம், நிலவளம் மலிந்து செழுமையாக இருக்கும். எங்கும் மலைகளும் நதிகளும் இருப்பதால் பல இயற்கைக் காட்சிகள் பொருந்தி விளங்குகிறது. தென்னை, கமுகு, தேக்கு, மிளகு, ஜாதிக்காய், கிராம்பு, ஏலம் முதலியன அங்கு மிகுதியாக விளைகின்றன. நாள்தோறும் இருவேளை நீராடி எமது உடலையும், உடையையும் சுத்தமாக வைத்துக்கொள்ளுவோம். நாங்கள் கல்வியி

லும் தொழில் முறைகளிலும் ஊக்கமுள்ளவர்கள். ஆவணி மாதத்தில் வரும் ஓணம் பண்டிகை எங்களுக்கு முக்கியமானது.

2. **மைசூர் சிறுவன்:**—என் பெயர் வீரண்ணு. நான் மைசூர் இராஜ்ஜியத்தில் பிறந்து வளர்ந்தவன். நாங்கள் பேசுவது கன்னட பாஷை. எமது நாட்டில் பாயும் காவிரி நதியில் கண்ணம்பாடி என்ற இடத்தில் ஒரு பெரிய அணை கட்டி, தண்ணீரைத் தேக்கி நீர்ப்பாசனம் செய்கிறார்கள். சிவசமுத்திரம் என்னும் இடத்தில் காவிரியின் நீர்வீழ்ச்சியினால் மின்சார சக்தி உண்டுபண்ணுகிறார்கள். பெங்களூர், கோலார் முதலிய இடங்களில் மின்சார விளக்குகள் போடவும், தொழிற்சாலைகளில் இயந்திரங்கள் ஓட்டவும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.



கோலாரில் தங்கச் சுரங்கமும், பத்திராவதி என்னுமிடத்தில் ஓர் இரும்புத் தொழிற்சாலையும், வேறு பல இடங்களில் பட்டு நூல் சேகரித்தலும் உண்டு. எங்கள் நாடு ஒரு இந்திய மன்னரால் ஆளப்பட்டு வருகிறது. நாங்கள் கண்ணியமும், ராஜ விசுவாசமும், தெய்வ பக்தியும் உள்ளவர்கள்.

3. ஆந்திர தேசச் சிறுவன்:—சென்னை ராஜதானியின் வடபாகத்திலுள்ள தெலுங்கு நாட்



டினன் நான். என் பெயர் சீதாராமய்யா. கிருஷ்ணா, கோதாவரி முதலிய புண்ணிய நதிகள பாய்வதால் எங்கள் நாடு மிகச் செழிப்புள்ளது. இந்நதி முக நிலங்களில் நவதானியங்களும், பருத்தி, புகையிலை, கருப்பு முதலியனவும் ஏராளமாய்ப் பயிர் செய்யப் படுகின்றன. தெலுங்கு எங்கள் தாய்மொழி. எங்கள் மொழியையும் நாட்டையும் நாங்கள் பெரிதும் போற்றுவோம்.

4. நிஜாம் இராஜ்ஜியச் சிறுவன்:— நான் நிஜாம் இராஜ்ஜியத்தைச் சேர்ந்த மகமதியச் சிறுவன். என் பெயர் மகமது இப்ராஹீம். எங்களுடைய தாய்மொழி உருது. தக்ஷிண பீடபூமியைச் சார்ந்த எமது இராஜ்ஜியத்தில் கோதாவரி, கிருஷ்ணா நதிகளும் அவைகளின் உபநதிகளும் பாய்கின்றன. என்றாலும், பெரும்பான்மையான பாகம் செழுமை குறைந்தது. சரித்திர சம்பந்தமான பல பெரிய ஊர்கள் இங்கே இருக்கின்றன. எங்கள் இராஜ்ஜியத்தை ஒரு மகமதி மன்னர் ஆண்டுவருகிறார். நடையுடை பாவனைகளில் நாங்கள் இந்துக்களைப் போல் இராவிட்டாலும், எங்கள் நாட்டில் பல இந்துக்கள் இருக்கிறார்கள். அவர்களோடு நாங்கள் நட்புடன் பழகி வருகிறோம்.

5. மகாராஷ்டிரச் சிறுவன் :—பம்பாய் இராஜதானியிலுள்ள மகாராஷ்டிர நாட்டில் பிறந்து வளர்ந்தவன் நான். எனது பெயர் மகாதேவ தேசாய். நான் பேசுவது மராட்டிய பாஷை. சரித்திரத்தில் புகழ் பெற்ற சிவாஜி எங்கள் நாட்டினரே. பூனா, பம்பாய் இவை எங்களுக்கு முக்கிய நகரங்கள். எமது மகாணத்தில் தொழில் முயற்சியும், வியாபார முயற்சியும் அதிகம். எங்கள் நாட்டு வீரர்களது தீரச் செயல்களைப் பற்றிய கதைகளைக் கேட்க எங்களுக்கு ஆசை அதிகம்.



6. வங்காளச் சிறுவன் :—கங்கை, பிரமபுத்திரா நதிகள் பாயும் சமவெளிப் பிரதேசமாகிய வங்காள மகாணத்தைச் சேர்ந்தவன் நான். என் பெயர் நரேந்திரநாத். சிறந்த வியாபார ஸ்தலமாகிய கல்கத்தா எங்களுக்குப் பிரதான பட்டணம். இரும்பும் நிலக்கரியும் வெட்டியெடுக்கப்படும் சுரங்கங்களுக்கும், நவதானியம், சணல் முதலிய விளை பொருள்களுக்கும் எங்கள் மகாணம் பெயர்பெற்றது. உலகம் புகழும் பெருமை வாய்ந்த ரவீந்திரநாத் தாகூர், ஜெகதீச சந்திரபோஸ், சுவாமி விவேகானந்தர், ஈசுவரசந்திர வித்தியாசாகரர்,

ராமகிருஷ்ண பரமஹம்ஸர் முதலிய பெரியார்கள் அவதாரஞ்செய்த புண்ணிய நாடு எமது வங்காள மகாணமே. நவராத்திரிப் பண்டிகை எங்களுக்கு முக்கியமானது. எங்கள் நாட்டுச் சிறுவர்கள் கல்வியிலும், விளையாட்டுக்களிலும் ஊக்கமும் சுறுசுறுப்பும் உள்ளவர்கள்.



7. பஞ்சாப் சிறுவன் :—இந்தியாவின் வடமேற்குப் பாகத்திலுள்ள பஞ்சாப் மகாணத்தைச் சேர்ந்தவன் நான். சீக்கிய மதத்தினனுகிய எனது பெயர் இருதயலால். ஸிந்துவும் அதன் உப நதிகளும் பாய்வதால் எங்கள் நாடு மிகச் செழிப்படைந்துள்ளது. இங்குக் கோடைக் காலத்தில் உஷ்ணமும், குளிர் காலத்தில் பனியும் குளிரும் அதிகம். எங்கள் நாடு கம்பளி, பட்டு, கோதுமை இவைகளுக்குப் பெயர் பெற்றது. இங்குச் சீக்கியர்கள், மகமதியர்கள், இந்துக்கள் ஆகிய மும் மதத்தினரும் வசிக்கிறுர்கள். நாங்கள் உறுதியான உடலும், புய பலமும் பெற்றவர்கள்.

மொழிப் பயிற்சி

**1. சொல் விளக்கம்:—நவதானியங்கள் = நெல், கோதுமை, எள், கொள், கடலை, உளுந்து, பயறு, துவரை, மொச்சை ஆகிய ஒன்பது வகைத் தானியங்கள். நதிமுக கிலம் = நதி கடலில் கலக்குமிடத்தில் ஏற்பட்டுள்ள நிலம். இதை இங்கிலீஷில் டெல்டா என்பார்கள். போற்று**

வோம்=பாராட்டுவோம். புய பலம்=தோள் வலிமை. பீடபூமி=மேடான சமவெளி. அவதாரம் செய்த=பிறந்த.

2. பூர்த்தி செய்:—

1. பஞ்சாப் மாகாணத்தில் ———,———,———ஆகிய மும்மதத்தினர் வசிக்கிறார்கள்.

2. நிஜாம் இராஜ்ஜியத்தில் ———,——— நதிகளும், அவைகளின் ——— பாய்கின்றன.

3. ——— என்னும் இடத்தில் காவிரியின் ——— மின்சார சக்தி உண்டுபண்ணுகிறார்கள்.

iii. நான், நாம், நாங்கள்—இச்சொற்கள் பேசுவோனையும், அவனைச் சார்ந்தோரையும் குறிப்பதால் தன்மை இடம் எனப்படும்.

நீ, நீர், நீங்கள்—இச்சொற்கள் பேசுவோனுக்கு முன்னே நிற்பவர்களைக் குறிப்பதால் முன்னிலை இடம் எனப்படும்.

அவன், அவள், அவர்கள் (அது, அவை)—இச்சொற்கள் தன்னையும் தன் முன் நிற்பவனையும் அல்லாது பிறரைக் குறிப்பதால் படர்க்கை இடம் எனப்படும்.

தடித்த எழுத்தில் அச்சிட்டுள்ள பெயர்ச்சொற்களுக்கு எண், இடம், பால் எழுது:

1. நாங்கள் கல்வியில் ஊக்கமுள்ளவர்கள்.
2. சிவாஜி தம் தாயிடத்தில் பக்தியுள்ளவர்,
3. நான் நரேந்திரநாத். எங்கள் தேசம் இந்தியா.
4. நீங்கள் அவர்களை அழைத்து வாருங்கள்.
5. கிளிகள் பழங்களைத் தின்றன.

# 18. வானவில்

1. இந்தப் படத்தில் எத்தனை பாராக்கள் இருக்கின்றன? மூன்றாவது பாராவில் எத்தனை வாக்கியங்கள்? கடைசி வாக்கியத்தில் எத்தனை சொற்கள்? ஸர் ஐஸக் நியூடன்—இதில் எத்தனை எழுத்துக்கள்?

2. உன் தங்கை வானவில் எப்படி உண்டாகிறதென்று கேட்கிறாள். நீ அதை விளக்கிச் சொல்.

3. வானவில்லில் காணும் ஏழு நிறங்கள் யாவை?

4. சூரிய வெளிச்சத்தில் ஏழு நிறங்கள் இருப்பதை முதலில் கண்டறிந்தவர் யார்? எவ்வாறு கண்டறிந்தார்?

5. சூரிய வெளிச்சத்தின் ஏழு நிறங்களையும் வானவில்லில் அன்றி வேறு எவ்வெப் பொருள்களில் கண்டறியலாம்?

பல நிறங்களுடன் வில் வடிவம் ஒன்று ஆகாயத்தில் தோன்றுவதை நீங்கள் பார்த்திருக்கிறீர்கள் அல்லவா? அதற்கு வானவில் என்று பெயர். அது எவ்வளவு அழகாகக் காண்கிறது! சில தருணங்களில் காலை வேளையில் மேற்கிலும், மாலை வேளையில் கிழக்கிலும் சூரியனுக்கு எதிராக வானவில் மேகங்களில் தெரியும். அது இவ்வாறு தோன்றுவது மழைத் திவலைகள் ஆகாயத்தில் இருப்பதற்கு ஓர் அறிகுறியாகும். நடுப் பகலிலாவது, இரவிலாவது வானவில் காணப்படுவதில்லை.

வானவில்லின் தோற்றம் மிகவும் அதிசயிக்கத் தக்கதே! அதில் காணும் நிறங்களைக் கவ

னியுங்கள். அதில் ஊதா, நீலி (கரு நீலம்), நீலம், பச்சை, மஞ்சள், கிச்சிலிப்பழ நிறம், சிவப்பு என ஏழு நிறங்கள் காணப்படுகின்றன. கரிய மேகத்தில் தோன்றும் வானவில்லில் இந்த ஏழு நிறங்களும் எவ்வாறு உண்டாகின்றன?

அதிகாலையில் பசும்புற்களின் நுனியில் தங்கி நிற்கும் பனித் துளிகளை உற்று நோக்கினால், அவைகளில் பல நிறங்கள் தோன்றுவதைக் காணலாம். காலை அல்லது மாலை நேரங்



களில் சூரியனுக்கு எதிர்முகமாகத் தண்ணீரை வாரிச் சிதற இறைத்தால், அந்த நீர்த்திவலைகளில் வானவில்லின் வர்ணங்கள் தென்படும். இவற்றைப் போலவே, மேகமண்டலத்திலுள்ள

நீர்த் துளிகளில் சூரிய கிரணங்கள் படும்பொழுது அந்தக் கிரணங்களிலும் ஏழு நிறங்களும் பிரிக்கப்பட்டு, இவ்வாறு வானவில் தோன்றுகிறது. முப்பட்டைக் கண்ணுடித் துண்டின் வழியாக வரும் சூரிய வெளிச்சத்தை ஒரு சுவரில் விழச்செய்து, அதில் ஏழு நிறங்கள் தோன்றுவதை முதன்முதல் கண்டறிந்தவர் ஸர் ஐஸாக் நியூடன் என்னும் ஆங்கிலேயரே.

இந்த ஏழு நிறங்களையும் சூரியனுடைய ஏழு குதிரைகள் என்றும், அவைகள் கட்டிய இரதத்தில் கதிரவன் ஊர்ந்துவருகிருனென்றும் சொல்வது இந்துக்கள் மரபு. வானவில்லை இந்திர தனுசு என்றும் கூறுவர்.

அழகாய்க் காணப்படும் இயற்கைக் காட்சிகளுள் ஒன்ருகிய வானவில்லைப் பார்க்குந்தோறும் நமக்கு அதிக மகிழ்ச்சி விளைகிறதல்லவா ?

மொழிப் பயிற்சி

1. சொல் விளக்கம்:—திவலை = துளி. மண்டலம் = வட்டம். அரிய = அருமையான. கதிரவன் = சூரியன். மரபு = வழக்கம். இந்திர தனுசு = இந்திரனுடைய வில். விளைகிறது = உண்டாகிறது.

2. அடுத்த தடவை வானவில்லைக் காணும்பொழுது நிறங்களின் வரிசையைக் கவனி. சிவப்பு இருப்பது மேற்புறமா? கீழ்ப்புறமா ?

3. வானவில்லைப்போல் படம் எழுது.

4. இவைகளின் நிறங்களை எழுது.

புல், வானம், பொன், மல்லிகை, செவ்வந்தி, குங்குமம், காகம்.

5. வார்த்தைகளைச் சுலபமாகப் பொறுக்கி எடுக்க எப்படி எழுதுவது? அ, ஆ, இ, ஈ..................என்று எழுத்துக்களின் வரிசை தெரியுமல்லவா? அ எழுத்து ஆரம்பிக்கும் சொற்களை முதலில் ஒன்றன்கீழ் ஒன்றாக எழுதி, பிறகு ஆ ஆரம்பிக்கும் சொற்களையும், முறையே இ............முதலிய எழுத்துக்கள் ஆரம்பிக்கும் சொற்களையும் வரிசைப்படுத்தி எழுதினால் வார்த்தைகளைச் சுலபமாகப் பொறுக்கி அறியலாம். இதற்கு அகர வரிசையில் எழுதுவது என்று பெயர். தமிழ் அகராதி என்னும் புத்தகத்தில் சொற்களின் வரிசையைக் கவனி.

இப்பதங்களை அகர வரிசையில் மாற்றி எழுது:

| | | |
|---|---|---|
| உச்சம் | டம்பம் | பத்திரிகை |
| களஞ்சியம் | ஐக்கியம் | யசமானன் |
| அட்டவணை | தரித்திரம் | ஞாயிறு |
| சரீரம் | ஈட்டி | இலக்கம் |
| இமை | மளிகை | எஃகு |
| ஏற்றம் | ஒய்யாரம் | வஞ்சகம் |
| ஆச்சரியம் | ஊக்கம் | ஔடதம் |
| ஓடம் | நகம் | |



# 20. கைத்திறன்

1. வெயில்வரினும் மழைவரினும்
விரிகுடையாம் கையே
வெயர்வைவரின் ஆற்றுசிறு
விசிறியதாம் கையே
துயிலவொரு மகவைத் தொட்டில்
இட்டசைக்கும் கையே
துரிதமுடன் எழுதவொரு
தூவிகொள்ளும் கையே.

2. மலரெடுத்து நல்ல செண்டு
மாலைகட்டும் கையே
வாய்க்கினிய பண்டமெல்லாம்
வைத்துதவும் கையே
சலமதனில் ஓடம் விடச்
சலிப்பிலதாம் கையே
தரையில் மோட்டார் ரயில் நடத்தச்
சமர்த்துளதாம் கையே.

3. கோபுரம்சேர் கோயிலொடு
குடிசைகட்டும் கையே
குளங்கிணறு குட்டையெல்லாம்
குழித்துதவும் கையே
ஆபரணம் பணிமணிகள்
ஆய்ந்துசெய்யும் கையே
ஆடைகள் பாவாடைகளும்
ஆக்குமெழிற் கையே.

4. நாடியசீர் நாட்டடைய
ராட்டுருட்டும் கையே

நல்லகதிர் நெய்யமிகு
வல்லமைகொள் கையே
பாடியவாய் தேனூறும்
பாரதியார் பாடல்
பண்ணமையப் பாடுதற்குப்
பாணிகொட்டுங் கையே,

5. மக்களைத் தம் ஒக்கல் வைத்து
வளர்த்திடுமென் கையே
வண்ணமலர் தலைக்கணிந்து
வாசமூட்டுங் கையே
தக்கபெரியோர்க்கு மிகத்தான்
வணங்கும் கையே
தரணியிலுன் திறமையெலாம்
சாற்றலெளி தலவே.

—ஸ்ரீ சி. தேசிக விநாயகம் பிள்ளை

மொழிப் பயிற்சி

திறன்=திறம், வலிமை ; துயில=தூங்க; மகவு=குழந்தை; துரிதமுடன்=வேகமாக; தூவி = இறகு, எழுதுகோல்; சலிப்பிலதாம் (சலிப்பு + இலதாம்) = தளர்ச்சி இல்லாத; சமர்த்து = சாமர்த்தியம்; பணி=ஆபரணம்; ஆய்ந்து = பரிசோதித்து; எழில் = அழகுள்ள; பண் அமைய=இசைப் பாட்டு அமைய; பாணி=கை; ஒக்கல் = இடுப்பு (இடுப்பில்); வாசமூட்டும்=வாசனை ஊட்டும் ; தரணி=பூமி ; சாற்றல்=சொல்லுதல்; எளிதலவே= எளிதல்லவாம்.

**1.** கையினால் செய்யக்கூடிய வேலைகளில் 3-வது பாட்டில் கூறப்பட்டன எவை ?

2. கையினால் தொட்டில் ஆட்டலாம். கையினால் தாளம் போடலாம்.—இந்தக் கருத்து வரும் வரிகளைப் படி.

3. பதம் பிரித்து எழுது:

விசிறியதாம், இட்டசைக்கும், மலரெடுத்து, வாய்க்கினிய, சலமதனில் ராட்டுருட்டும், தேனூறும்,எளிதலவே.

4. மலர் ; ஆக்கு; எழில்; பாணி—இந்தப் பதங்கள் வரும் வரிகளைப் படி. ஒவ்வொரு வரியின் கருத்தைச் சொல்.

5. வாய்க்கு இனிய பண்டமெல்லாம் வைத்துக் கை உதவும். இதைப்போல் ஐந்து வாக்கியங்கள் எழுது.

6. இப்பாட்டில் விவரிக்கப்பட்டுள்ள பல வேலைகளில் உன் கையினால் என்ன என்ன வேலைகள் செய்ய முடியும்?

---

## 21. தவறு என்ன?

இந்த வாக்கியங்களில் என்ன தவறு? சரியாக மாற்றி எழுது. (நேரம் : 15 நிமிஷம்)

1. வானவில் காலையில் கிழக்கிலும், மாலையில் மேற்கிலும் தெரியும்.

2. மஞ்சளையும் சுண்ணாம்பையும் கலந்தால் கறுப்பு நிறமாகும்.

3. நேற்று வியாழக்கிழமை; இன்று சனிக்கிழமை.
4. பொழுது விடிந்ததும் மாலை வேளை.
5. குதிரை கதறும்; மாடு கனைக்கும்.
6. கிணறு குடத்தில் விழுந்துவிட்டது.
7. சேவல் ஒரு நாளைக்கு ஒரு முட்டையிடும்.
8. காளை மாடு போட்ட கன்றைப் பிடித்துக் கட்டு
9. தண்ணீர் பள்ளத்திலிருந்து மேட்டிற்கு ஓடும்.
10. பொங்கல் பண்டிகை தைமாதம் 10-ம்தேதி வரும்.

11. அமாவாசையன்று நிலாச்சாப்பாடு நேர்த்தியாக இருக்கும்.

12. இட்டலி குடித்து நீர்மோர் தின்ருன்.

13. தொள்ளாயிரத்து இருநூற்று மூன்று.

14. இந்தியா தமிழ்நாட்டில் ஒரு பாகம்.

15. நூசியும் ஊலும் எடுத்து வா.

16. கோடை காலத்தில் மழை அதிகம் பெய்யும்.

---

## 22. கவி சுப்பிரமணிய பாரதி

படித்துக் கண்டுபிடி :

1. பாரதியாரின் படத்தைப் பார்த்து, அவரது உடை தோற்றம் இவைகளைப்பற்றி இரண்டு வாக்கியங்கள் சொல்.

2. இவருக்குப் பாரதி என்ற பெயர் எவ்விதம் ஏற்பட்டது?

3. செல்லம்மாள் யார்? அவள் பிறந்த ஊர் எது?

4. பாரதியாரின் பிறப்பு, படிப்பு, செய்த தொழில், இயற்றிய நூல்கள் இவைகள் எந்தெந்தப் பாராவில் விவரிக்கப்பட்டிருக்கின்றன?

5. 'ஏழை எளியவர்க்கு எதையும் கொடுத்துவிடுவார்.'— இந்த வாக்கியத்தைக் கண்டுபிடி. இதற்கு உதாரணமாக அவர் செய்த ஒரு காரியத்தைச் சொல்.

1. தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற—எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா,
அமிழ்தில் இனியதடி பாப்பா—தம்
ஆன்றோர்கள் தேசமடி பாப்பா.

இந்தப் பாப்பா பாட்டைப் பாரதியார் இயற்றினர். இதை நீங்கள் எல்லோரும் படித்திருப்பீர்கள். இதே போல அநேக தேசியப் பாடல்களை அவர் இயற்றியிருக்கிருர். அவர் சமீபகாலத்தில் வாழ்ந்திருந்தார். அவர் முழுப் பெயர் சி. சுப்பிரமணிய பாரதி. அவரது வாழ்க்கை வரலாற்றை இங்குப் படிப்போம்.

2. திருநெல்வேலி ஜில்லாவில் எட்டையபுரம் என்ற ஒரு ஜமீன் இருக்கிறது. அதில் 1882-ம்ஸு நவம்பர்மீ பாரதியார் பிறந்தார். இவர் தந்தை சின்னசாமி ஐயர்; தாய் லக்ஷ்மி அம்மாள். மைந்தன் பிறந்த ஐந்தாம் பிராயத்தில் லக்ஷ்மி அம்மாள் காலஞ் சென்ருள். சின்னசாமி ஐயரே பாரதியாரை வளர்த்து வந்தார்.

3. சின்னசாமி ஐயருக்கு ஜமீனில் வேலை. அவர் தமது பையனை ஜமீன்தார் சபைக்கு அடிக்கடி அழைத்துப் போவது வழக்கம். பாரதியார் தமது ஏழாவது வயதில் ஒரு பாடல் இயற்றி, சபையிலிருந்த வித்துவான்களை அதிசயிக்கச் செய்தார். உடனே அவர்கள் அப்பையனுக்குப் 'பாரதி' என்ற பட்டம் அளித்தனர். அதுமுதல் சுப்பிரமணிய பாரதி என்ற பெயரே வழங்கிவருகிறது.

4. பின்பு பாரதியார் திருநெல்வேலியி லுள்ள இந்து கலாசாலையில் மூன்றுவது பாரம்



கவி சுப்பிரமணிய பாரதியார்.

முதல் ஐந்தாவது பாரம் வரை படித்தார். சிறு வயதில் அவர் யாருடனும் அதிகம் பேசுவ தில்லை ; ஒத்த வயதுள்ள பிள்ளைகளுடன் விளை

யாடுவதும் அருமை. தோட்டம், துறவு, கோயில் முதலிய தனி இடங்களில் அவர் அமர்ந்து காலங் கழிப்பது வழக்கம். பள்ளிக் கூடப் படிப்பு இவருக்கு உற்சாகம் அளிக்க வில்லை. 'விளையும் பயிர் முளையிலே' என்பது போல அக்காலத்திலேயே இவரது புத்திக் கூர்மையை ஆசிரியர்கள் கண்டு மெச்சினர்.

5. பதினைந்தாம் வயதில் பாரதியாருக்கு விவாகம் நடந்தது. இவர் மனைவி, கடையம் ஸ்ரீ செல்லப்பா ஐயர் குமாரத்தி ஸ்ரீமதி செல்லம்மாள். பிறகு தம் தந்தையையும் பாரதி இழந்துவிடவே, அவரை ஆதரிப்பார் ஒருவரும் இல்லை. காசிக்குச் சென்றிருந்த தமது அத்தை அழைத்தபடியால் அவ்விடம் சென்றார். காசியி லுள்ள கலாசாலையில் ஒரு வருஷம் படித்து, பிரவேசப் பரீட்சையில் முதல் வகுப்பில் தேறி னார். ஹிந்தியும் ஸம்ஸ்கிருதமும் கற்று, அவை களிலும் தேர்ச்சிபெற்றார்.

6. எட்டையபுரம் ஜமீன்தார் ஊருக்கு வரும்படி வேண்டிக்கொண்டதால் 1901-ல் பாரதியார் தமிழ்நாடு திரும்பிவந்தார். ஒரு நாள் ஜமீன்தாரின் விருப்பப்படி, காவடிச்சிந்து ஒன்று இயற்றிப் பாடி எல்லாரையும் மகிழச் செய்தார்.

7. சில நாட்களுக்குப் பிறகு பாரதியார் மதுரை சென்று, அங்குள்ள சேதுபதி கல்விச் சாலையில் தமிழ்ப் பண்டிதராக அமர்ந்தார்.

மூன்று மாதத்திற்குள் அந்த உத்தியோகத்தையும் விட்டுவிட்டுச் சென்னை சென்று 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் உதவி ஆசிரியராக 1904-ல் அமர்ந்தார். அப்பொழுது அதன் ஆசிரியர் ஜி. சுப்பிரமணிய ஐயர். இவர் பத்திரிகைத் தொழிலில் மிக்க வல்லவர். இவரிடம் பாரதிக்குத் தக்க பயிற்சி கிடைத்தது.

8. சுதேசமித்திரன் காரியாலயத்தில் சுமார் இரண்டரை வருஷ காலமே இருந்தார். இஷ்டப்படி எழுதவும் பேசவும் வேண்டுமென்ற அவா ஏற்பட்டதால் 'இந்தியா' என்னும் பத்திரிகையைத் தாமே வெளியிடலானார். அவைகளில் பல கட்டுரைகளும், தேசியப் பாடல்களும் வெளிவந்தன.

9. 1908-ல் 'இந்தியா' பத்திரிகை அச்சுக்கூடம் மூடப்பட்டது. பாரதியார் புதுச்சேரி சென்று அங்கே வசிக்கலானார். அவ்விடத்தில் பாரதியார் வறுமையினால் பல இன்னல்கள் உற்றார். வீட்டிலே அரிசி, உப்பு, புளி இவை இரா. அதை யறிந்து அன்பர் யாரேனும் ஒன்று, இரண்டு ரூபாய் கொடுப்பர். வீதிகளிலே ஏழைகளைக் கண்டால் அப்பணத்தைப் பாரதி அவர்களுக்குத் தருமம் செய்துவிடுவார். வீடு வந்து சேர்ந்ததும் 'அரிசி இல்லையே' என்பாள் மனைவி. 'நல்லது, எல்லாரும் ஏகாதசி விரதம் கொள்ளலாம்' என்பார் பாரதி.

10. ஒரு நாள், பாரதியார் காய்கறிக் கடைக்குச் சென்றார். கையில் ஒரு ரூபாய் இருந்தது. அந்த ஒரு ரூபாய்க்கும் கீரைத் தண்டு வாங்கித் தாமே தலையில் சுமந்து கொண்டு வீடு வந்துசேர்ந்தார். மனைவி அச் சுமையை இறக்கி, "இவ்வளவு கீரை எதற்கு ? இதெல்லாம் வீணாகிவிடுமே. இரண்டு தண்டு இருந்தால் நமது குடும்பத்திற்கு வெள்ளம்" என்று சொன்னாள். கவிஞர், "பெண்ணே ! நமது வீட்டுக்கு மாத்திரம் கீரை வாங்கினால் போதுமா? காய்கறி இல்லாமல் பல குடும்பங்கள் தவிக்குமே" என்று மறுமொழி பகர்ந்தார். பின்பு அக்கீரைத் தண்டுகளை எடுத்துக்கொண்டு போய் வீடுவீடாகக் கொடுத்தார். இதனால் அவர் குணம் நன்கு விளங்கும்.

11. சுமார் பத்து வருஷம் அவர் புதுச் சேரியில் வசித்துவந்தார் 1918-ல் புதுவை யைவிட்டு மனைவி மக்களுடன் கடையம் சென் றார். மீண்டும் சென்னைக்கு வந்து சுதேசமித் திரனில் துணையாசிரியராக இருந்தார். பாரதி யாரின் உடல் நாளுக்கு நாள் இளைத்து, 1921-ம்வருஷம் செப்டம்பர்மீ 11உ விண்ணுலகு எய்தினார்.

12. கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம், கிளிப் பாட்டு, முரசு, தேசீயப் பாடல்கள் இவல் அவர் பாடிய அநேகபாடல்களிசிலாவைம்.

சந்திரிகை, கதைக் கோத்து முதலியன இவர் எழுதிய வசனங்கள்.

**13.** பாரதியார் கபடு சூது தெரியாதவர். ஏழை எளியோருக்கு எதையும் கொடுத்துவிடு வார். அவரது பாடல்கள் எளிய நடையில் உள் ளன; வீரமும் ஆவேசமும் ததும்புவன. இவர் தமது பாடல்களினுலும் கட்டுரைகளினுலும் தமிழ்மொழிக்குப் புதிய சக்தியையும், தமிழ் மக் களுக்குப் புதிய உணர்ச்சியையும் உண்டுபண்ணி இருப்பதால், பாரதியாரைத் தேசீயக் கவிராஜ சிங்கம் என்று எல்லோரும் புகழ்வர்.

மொழிப் பயிற்சி

i. சொல் விளக்கம்:—அமிழ்து = அமிர்தம்; மரணத் தைத் தடுக்கக்கூடிய தேவர் உணவு. ஆன்ருேர் = அறிவில் பெரியோர்கள். தேசீய = தேசத்தைப்பற்றிய. வாழ்க்கை வரலாறு = ஜீவிய சரித்திரம். இயற்றிய = செய்த, எழுதிய. காவடிச் சிந்து = ஒருவிதப் பாட்டு. ஸம்ஸ்கிருதம் = வட மொழி. துணை ஆசிரியர் = உதவி ஆசிரியர். காரியாலயம் = ஆபீஸ். கட்டுரை = வியாசம். இன்னல்கள் = துன்பங்கள். விண்ணுலகு = சுவர்க்கம். ஏகினர் = சென்ருர். பகர்ந்தார் = சொன்னுர். மறுமொழி = பதில்.

௵ = வருஷம். ௴ = மாதம். ௳ = தேதி.

ii. எட்டையபுரத்தில் பாரதியார் பிறந்தார்.

அவர் தந்தை பாரதியாரை வளர்த்து வந்தார்.

'பாப்பா பாட்டு' பாரதியாரால் பாடப்பட்டது.

ஜமீன்தார் பாரதியாருக்குப் பணம் கொடுத்தார்.

இந்த நான்கு வாக்கியங்களிலும் "பாரதியார்" என்ற சொல்லைக் கவனி. இவ்விதம் ஒரு பெயர்ச்சொல் மாறுபாடு அடைவதை வேற்றுமை என்று சொல்வது.

1. கீழ்க்கண்ட வார்த்தைகளில் ஐ, ஆல், கு,—சேர்த்துச் சொல்.

அவன், பூனை, செடி, கண்

மாதிரி :—அவன், அவனை, அவனால், அவனுக்கு.

2. விட்ட எழுத்துக்களைப் பூர்த்தி செய்:

கண் மிகவும் அழகான உறுப்பு.
அடிக்கடி கண் — க் கசக்காதே.
கண் — நன்றாக உற்றுப் பார்.
கண் — மருந்து போடு,

---

# 23. செந்தமிழ் நாடு

1. செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே. (செந்தமிழ்)

2. வேதம் நிறைந்த தமிழ் நாடு—நல்ல
வீரஞ் செறிந்த தமிழ் நாடு—நல்ல
காதல் புரியும் அரம்பையர் போல் இளங்
கன்னியர் சூழ்ந்த தமிழ் நாடு. (செந்தமிழ்)

3. காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர் வையை பொருநை நதி—யென
மேவிய ஆறுபல வோடத் திரு
மேனி செழித்த திருநாடு. (செந்தமிழ்)

4, நீலத் திரைக்கடல் ஓரத்திலே—நின்று
நித்தம் தவம்செய் குமரி யெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்
மண்டிக்கிடக்கும் தமிழ் நாடு. (செந்தமிழ்)

5. கல்வி சிறந்த தமிழ் நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ் நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின் மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ் நாடு. (செந்தமிழ்)

—பாரதியார்.

மொழிப் பயிற்சி

i. சொல் விளக்கம் :—செறிந்த = மிகுந்த. அரம்பையர் = தேவலோகப் பெண்கள். கன்னியர் = இளம் பெண்கள். பொருநை = தாமிரபரணி. திரை = அலை. குமரி = கன்னியா குமரி. மாலவன் = விஷ்ணு. குன்றம் = மலை. மாலவன் குன்றம் = திருப்பதி மலை. மண்டி = மிகுந்து. பார் = பூமி.

ii. இந்தப் பாட்டை எல்லோரும் ராகத்துடன் சேர்ந்து சொல்லப் பழக்கிக்கொள்ளுங்கள். கும்மி யடித்துக் கொண்டும் பாடலாம்.

---

## 24. ஒரு விநோத சம்பாஷணை

படித்து விடை சொல் :

1. ஆகாய விமானங்களின் பெருமை சிறுமைகள் என்ன ?

2. மோட்டார் பஸ்கள் ஏற்பட்டதால் ரயில் வண்டிகளுக்குப் பெருமையா, குறைவா ?

3. குதிரை வண்டியும் மாட்டு வண்டியும் எந்த விஷயத்தில் பெருமை பாராட்டிக்கொண்டன ?

4. "ஆறிலும் சாவு, நூறிலும் சாவு"—இதைச் சொல்லியது எது ?

ஒரு சமயம் மாட்டு வண்டி, ஜட்கா வண்டி, மோட்டார் வண்டி, ரயில் வண்டி, ஆகாய விமானம் இவைகள் ஓரிடத்தில் கூடியிருந்தன.

ஆகாய விமானம் (மிகவும் கர்வத்துடன் மற்ற வண்டிகளை நோக்கி) : மெதுவாக ஊர்ந்து செல்லும் வாகனங்களே! இனிமேல் உங்கள் காலம் ஒய்ந்துவிட்டது. எங்கள் காலம் இது!

மோட்டார் வண்டி : ஆம், தம்பீ! நீ சொல்வது நிஜந்தான். ஊர்ந்துசெல்லும் வாகனங்களை இனி மதிப்பவர் யாருமில்லை. சில வருஷங்களாக ரயில் வண்டி தனக்கு நிகர் இல்லை என்று இறுமாப்பாக இருந்தது. இப்போது மோட்டார் பஸ் வண்டிகளாகிய நாங்கள் ஏற்பட்ட பிறகு ரயில் வண்டிகளின் கர்வம் குறைந்துவிட்டதல்லவா ?

ரயில் வண்டி : ஒரு குறையும் இல்லை. மோட்டார் வண்டிகளும் ஆகாய விமானங்களும் எத்தனை ஜனங்களை ஏற்றிக்கொண்டு செல்லமுடியும்? ஜனங்களுக்குப் பேருதவி செய்வது நாங்கள் தான்.

ஆகாய விமானம் : நான் மணிக்கு நூறு மைல் வீதமும், சில சமயம் இருநூறு மைல்

வீதமும் பறந்து செல்வேன். அவசரமாகப் பிரயாணம் செய்ய ஆகாய மார்க்கமே சிறந்தது.

**மோட்டார் வண்டி :** இது என்ன பிரமாதம்! நான் கூடச் சில சமயம் மணிக்கு நூறு மைல் செல்வேன். சாதாரணமாக மணிக்கு நாற்பது மைல் செல்வது வழக்கம்.

**ரயில் வண்டி :** ஏன் இந்தப் பெருமை? நான் நூற்றுக்கணக்கான ஜனங்களையும், ஏராள மான சாமான்களையும் ஏற்றிச் செல்வேன். சில சமயம் மோட்டார் வண்டிகளையும் தூக்கிச் செல் வேன்.

**ஆகாய விமானம் :** ரயில் வண்டியே! தண்ட வாளங்கள் போட்டுள்ள இடத்தில் தான் உன்னால் செல்ல முடியும். நல்ல சாலைகள் இருந்தால்தான் மோட்டார் வண்டி சுலபமாகச் செல்லும். நான் சுயேச்சையாக வானத்தில் பறந்து செல்வேன். தங்கு தடையின்றித் தாராளமாகப் பாய்ந்து போவேன். ஆயிரம் அடி உயரத்திலும் செல் வேன்; ஐயாயிரம் அடி உயரத்திலும் பறந்து போவேன். மேகங்களில் மறைந்து உயர எழும்புவேன். உயர இருந்து பூமியில் ஊர்ந்து செல்லும் உங்களைப் பார்ப்பேன்.

**ரயில் வண்டி :** அதெல்லாம் இருக்கட்டும். உன் செய்கை பயங்கரமானது; அபாயம் மிகுந் தது. சிறிது பழுது ஏற்பட்டால் திடீரெனக்

கவிழ்ந்துவிடுவாய். 'படார்' என்று தரையில் விழுந்து நாசமடைவாய். உன்னை நம்பி எவ்வளவு ஜனங்கள் மடிந்துபோயிருக்கின்றனர்! மெதுவாகச் சென்றாலும், எங்களைப்பற்றி அவ்வளவு பயமில்லை.

ஆகாய விமானம்: அபாயம் எதிலும் உண்டு. சாப்பிடும்போதும் தூங்கும்போதுங் கூட ஒருவனுக்கு அபாயம் உண்டாகலாம். அபாயம் என்பதெல்லாம் ஒருவன் மனோபாவத்தைப் பொறுத்தது. 'ஆறிலும் சாவு, நூறிலும் சாவு.' மரணத்திற்குப் பயந்து மனிதர்கள் முன்னேற்ற மடையாமல் இருக்க முடியுமா? ரயில் வண்டியில் அபாயம் இல்லையா? தண்டவாளம் பிசகி வண்டி விழுவதும், வண்டிகள் மோதிக்கொள்வதும் ஏற்படுகின்றனவே! ஆனால் ஆகாயத்தில் பறக்கும் நாங்கள் சுலமாக விலகிக் கொள்ளலாம்.

மாட்டு வண்டி: (இதுவரையில் பேசாமல் கேட்டுக்கொண்டு இருந்தது. இப்போது சிரித்துக்கொண்டு) அண்ணன்மாரே! உங்கள் இயந்திரத்தில் பிசகு ஏற்பட்டால் உங்கள் கதி பரிதாபமானது. ஒரு சமயம் நகர முடியாமல் தவித்த ஒரு மோட்டார் வண்டியை நான் இழுத்து வந்தேன்.

குதிரை வண்டி: (கனைத்துச் சிரித்துக் கொண்டு) நாங்கள் எப்பாடு பட்டாவது வீடு வந்து சேர்ந்துவிடுவோம். காட்டிலோ, மேட்டிலோ, நடுக்கடலிலோ நீங்கள் விழுந்துவிட்டால் உங்கள் விதி அத்துடன் முடிந்தது.

ரயில் வண்டி: ஏன் வீணுகப் பேசிச் சிரிக்கிறீர்கள்! ஐம்பது வருஷங்களுக்கு முன் ரயில் வண்டி ஆச்சரியமாயிருந்தது. இப்போது நாடெங்கும் இருப்புப் பாதைகள் ஏற்பட்டு, ரயில் பிரயாணம் சர்வ சாதாரணமாகிவிட்டது.

ஆகாய விமானம். தமையனுரே! அதையே தான் நானும் சொல்கிறேன். இன்னும் ஐம்பது வருஷங்களுக்குப் பிறகு ஆகாய விமானப் பிரயாணமும் சர்வ சாதாரணமாகிவிடும். எதுவும் புதிதாக இருக்கும்போது பயமாக இருக்கும். பழகப் பழகப் பயம் குறைந்து, அதிக ஜனங்கள் பிரயோசனப்படுத்திக்கொள்வார்கள். இதுவே வாழ்க்கையின் இயல்பு. பழையன விலகிப் புதியன புகுவது சகஜம்.

### மொழிப் பயிற்சி

i. பேருதவி, கர்வம், சுயேச்சை, முன்னேற்றம் சர்வ சாதாரணம், பழுது.—இவைகளை உபயோகித்து வாக்கியங்கள் சொல்.

ii. சென்னையிலிருந்து விமானம் வந்தது.
—(ஐந்தாம் வேற்றுமை)

அது செட்டியாருடைய விமானம்.
—(ஆறும் வேற்றுமை)

விமானத்தில் பெட்டி இருக்கிறது.
(ஏழாம் வேற்றுமை)

கோபாலா! விமானத்தில் எங்கே போனாய்?
(எட்டாம் வேற்றுமை)

ஒரு வார்த்தையின் எட்டு வேற்றுமை மாறுதல்களை அறிந்து கொள். வேற்றுமை மாறுதல்களைக் காட்டும் எழுத்துக்களுக்கு உருபுகள் என்று பெயர். அந்தந்த வேற்றுமைக்குச் சேர்க்கும் உருபுகளாவன:

| | | | |
|---|---|---|---|
| முதல் | வேற்றுமை | ; உருபு இல்லை | |
| 2-ம் | ,, | : ஐ | உருபு |
| 3-ம் | ,, | : ஆல், ஒடு | ,, |
| 4-ம் | ,, | : கு | |
| 5-ம் | ,, | : ன், இருந்து | ,, |
| 6-ம் | ,, | : அது, உடைய | ,, |
| 7-ம் | ,, | : இல், இடம் | ,, |
| 8-ம் | ,, | : ஏ, ஆ | ,, |

எட்டாம் வேற்றுமையை விளி வேற்றுமைஎன்றும், முதல் வேற்றுமையை எழுவாய் வேற்றுமை என்றும் சொல்வதுண்டு.

---

# 25. துருவன்

**படித்துக் கதை சொல்:**

வகுப்பிலுள்ள பிள்ளைகள் எல்லோரும் இக் கதையை ஐந்து நிமிஷங்களுக்குள் படிக்கவேண்டும். புத்தகத்தை மூடிக் கீழே வைத்துவிட்டு, முதலில்

ஒருவன் கதையை ஆரம்பித்து ஒரு வாக்கியம் சொல்ல வேண்டும். அடுத்தவன் அந்த வாக்கியத்தை யொட்டித் தொடர்ந்தாற்போல் இன்னொரு வாக்கியம் சொல்ல வேண்டும். இப்படியே ஒவ்வொரு பையனும் வரிசையாகச் சொல்லிக் கதையை முடிக்கவேண்டும்.

வானத்தில் பல நட்சத்திரக் கூட்டங்களைப் பார்க்கிறோம். இவைகளின் பெயர்கள் எல்லாம் உங்களுக்குத் தெரியுமா? அங்கே இருபத்தேழு நட்சத்திரக் கூட்டங்கள் காணப்படுகின்றன. இவைகளைத் தவிர வேறு பல நட்சத்திரங்களும் உள. அவைகளுக்குச் சற்று வடக்காகத் தாழ்ந்து ஒரு சிறு நட்சத்திரம் இருக்கிறது. அதுவே வடகோடி நட்சத்திரம். அதற்குத் துருவன் என்று பெயர். இந்த நட்சத்திரம் மாத்திரம் எப்போதும் ஒரே இடத்தில் நிலையாக இருக்கும். ஆனால் மற்ற நட்சத்திரங்கள் எல்லாம் துருவனைச் சுற்றிச் செல்வதுபோலிருக்கும். ஒரே திடபுத்தியுடன் இருப்பவனைத் துருவன்போல் இருக்கிறான் என்று நாம் சொல்லுகிறோம்.

முற்காலத்தில் **உத்தானபாதன்** என்ற ஒரு மன்னன் நமது நாட்டை ஆண்டுவந்தான். அந்த அரசனுக்கு சுநீதி, சுருசி என்ற இரண்டு மனைவிகள் இருந்தனர். இவர்களில் சுநீதி மகாலக்ஷ்மி போன்ற அழகுள்ளவள் ; கற்பில் சிறந்த

வள். ஆனால் சுருசி, மன்னனைத் தன் வசப் படுத்திக்கொண்டு, சுநீதியை வெறுக்கும்படி செய்தாள்.

காலக்கிரமத்தில் சுநீதி மிகவும் அழகிய ஓர் ஆண் குழந்தையைப் பெற்றாள். அவனுக்கு துருவன் என்று பெயரிட்டனர். துருவன் பிறந்த சில நாட்களுக்கெல்லாம் சுருசிக்கும் ஒரு புதல்



வன் பிறந்தான். இவன் பெயர் உத்தமன். இவ்விரு பிள்ளைகளும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந் தார்கள்.

ஒரு நாள் சிங்காதனத்தில் வீற்றிருந்த அரசன் மடியில் உத்தமன் உட்கார்ந்து விளையாடிக்கொண்டிருந்தான். அருகில் சுருசியும் நின்றாள். துருவன் அப்பொழுது ஓடிவந்து தானும் தன் தந்தையின் மடிமேல் ஏறி உட்கார்ந்தான். அதைக் கண்ட மாற்றாந்தாயாகிய சுருசி மிகவும் சினந்து, பற்களை நறநறவென்று கடித்தாள். "சுநீதி வயிற்றில் பிறந்த உனக்கு உத்தானபாதர் மடியில் ஏறி உட்காரும் சிறப்பு உண்டோ?" என்று கோபித்து விரட்டினாள்.

இதைப் பார்த்த உத்தானபாதன் விசனமுற்றான். எனினும், அவன் மௌனமாகவே இருந்தான். துருவன் தன் தாய் சுநீதியிடம் ஓடி, சிற்றன்னை கூறிய கொடிய வார்த்தைகளைச் சொல்லி விம்மி விம்மி அழுதான். சுநீதி நல்ல பதவி கிடைக்கும்பொருட்டு சுவாமியை வேண்டிக்கொள்ளும்படி புத்திமதி கூறித் தேற்றினாள்.

அப்போதே சிறுவனான துருவன் காட்டிற்குச் சென்று சுவாமியைத் தியானஞ் செய்தான். பல நாட்கள் காட்டிலேயே இருந்து சுவாமியை நினைத்துத் தவஞ் செய்து வரலானான். சுவாமியும் அவனது மனோதைரியத்தைக் கண்டு மிகவும் மகிழ்ந்தார். அவனுக்கு எதிரில் தோன்றினார். சுவாமியைக் கண்டு துருவன் சந்தோஷமடைந்

தான். அப்பொழுது கடவுள், "குழந்தாய்! நீ இந்த உலகத்திலுள்ள அரசர்கள் எல்லோரும் வணங்க நெடுங்காலம் ஆட்சி புரிவாய். முடிவில் உனக்காக வடதிசையில் ஒரு பெரிய மண்டலத்தைப் படைக்கப் போகிறேன். நீ அந்த மண்டலத்தில் என்றும் அழியாமல் அரசாளுவாய். உன்னை சப்த ரிஷிகள் நாள்தோறும் பிரதக்ஷிணம் செய்துகொண்டிருப்பார்கள். உலகில் உள்ளவர்கள் உன்னைப் போற்றுவார்கள். கடலில் பிரயாணஞ் செய்யும் மாலுமிகள் உன்னைத் தம் குல தெய்வமாக வணங்குவார்கள்," என்று ஆசீர்வதித்து மறைந்தார்.

இதனிடையில், துருவனைக் காணுமல் உத்தானபாதன் தவித்தான். உத்தானபாதன் அவனைத் தேடிக்கொண்டு காட்டிற்கு வந்தான். பிறகு உத்தானபாதன் துருவனேடு அரண்மனைக்குத் திரும்பி அம் மைந்தனுக்குத் தன் இராஜ்ஜியத்தைக் கொடுத்து முடிசூட்டினன். துருவன் மிகவும் நீதியாக அரசு செய்து வந்தான். பின்பு அவன் இறந்ததும், துருவன் என்ற நட்சத்திரமாக இன்றும் விளங்கி கின்றுன்.

### மொழிப் பயிற்சி

1. மன்னன் = அரசன், இராஜா. கற்பு = கணவனிடத்தில் பக்தி. புதல்வன் = மகன், மைந்தன். சிங்காதனம் = சிம்மாசனம். மாற்றுந்தாய் = மற்றொரு தாயார்.

சிற்றன்னை = சிறிய தாயார். தியானம் = மனத்தில் நினைத்தல். மண்டலம் = விசாலமான இடம். பிரதக்ஷிணம் = சுற்றி வருதல். மாலுமி = கப்பலோட்டி. முடி சூட்டினான் = பட்டாபிஷேகம் செய்தான். முடி = கிரீடம். வண்ணம் = அழகு.

2. துருவ நட்சத்திரம், சப்தரிஷி மண்டலம் இவைகளை வானத்தில் இரவில் பார்த்து அறி. அசுவினி முதலிய 27 நக்ஷத்திரங்களைத் தெரிந்துகொள்.

3. **பொருள் வித்தியாசம் அறிக :**

| | |
|---|---|
| கூறிய — கூரிய | துறை — துரை |
| ஏறி — ஏரி | உறை — உரை |
| அறிய — அரிய | குழி — குளி |
| இறங்கு— இரங்கு | பதம் — பாதம் |
| எறி — எரி | ஆள் — ஆல் |

4. **பூர்த்தி செய் :**

1. மகாலக்ஷ்மி போல் அழகாயிருந்தாள்.
2. பனிக்கட்டிபோல் குளிர்ச்சியாக இருந்தது.
3. பால்போல் —— இருந்தது.
4. புல்போல் —— இருந்தது.
5. காகம்போல் —— இருந்தது.
6. பட்டுப்போல்—— இருந்தது.
7. கல்போல் —— இருந்தது.

5. **எழுவாய், பயனிலை :**

i. உத்தானபாதன் ஆண்டான். இந்த வாக்கியத்தில், எவன் ஆண்டான்? உத்தானபாதன்.

ஆளுந் தொழிலைச் செய்தவன் உத்தானபாதன். ஆதலால், உத்தானபாதன் என்னும் சொல் எழுவாய் எனப்படும்.

அவன் செய்த தொழிலை ஆண்டான் என்னும் சொல் தெரிவிக்கிறது. இது பயனிலை எனப்படும்.

ii. இங்கு வா—இந்த வாக்கியத்தில் வா என்னும் வினைச்சொல் பயனிலை. எழுவாய் கண்டுபிடிக்க, 'யார் வா ?' என்று கேட்டால், இதில் 'நீ வா' என்பது பொருள். ஆதலால் இதில் 'நீ' என்பது எழுவாய். அது வாக்கியத்தில் இல்லாமல் மறைந்திருப்பதால் தோன்ருஎழுவாய் எனப்படும்.

iii. எழுவாய், பயனிலை கண்டுபிடி :

1. துருவன் தவஞ் செய்தான்.
2. சுருசி கோபித்து விரட்டினாள்.
3. ஒரு புதல்வன் பிறந்தான்.
4. சுநீதி ஆண் குழந்தையைப் பெற்ருள்.
5. ஆட்சி புரி.

---

## 26. குணத்தைக் கண்டுபிடி

1. பார்வதியும் அவள் தாயாரும் சந்தைக்குச் சென்ருர்கள். வழியில் ஒரு கூடைக்காரி கூடை நிறையக் கத்தரிக்காய் தூக்கிச் சென்ருள். அவள் கூடை ஒரு மரக்கிளையில் இடித்துச் சில கத்தரிக்காய்கள் தரையில் விழுந்தன. "ஐயோ! கூடையை இறக்கி வைத்துவிட்டுக் காய்களைப் பொறுக்கவேண்டுமே" என்று நினைத்து அவள் விழித்தாள். இதைப் பார்த்திருந்த பார்வதி ஓடிப் போய் அக்காய்களைப் பொறுக்கி எடுத்துக் கொடுத்தாள்.

பார்வதியின் குணத்தை எந்த வார்த்தை வர்ணிக்கும்?—சந்தோஷமான, உபகாரமுள்ள, அழகான, கோபமுள்ள.

2. கந்தன் கதை வாசித்துக்கொண்டிருந்தான். அவனருகில் தகப்பனார் கீழே வைத்திருந்த மைக்கூட்டில் பேனாவைத் தோய்த்து எழுதிக்கொண்டிருந்தார். திடீரென்று வாசலிலிருந்து ஒரு கன்றுக்குட்டி ஓடி வந்தது. நிமிர்ந்து பார்த்த கந்தன், உடனே ஓடிப்போய்க் கன்றுக்குட்டியைப் பிடித்துக் கட்டினான்.

கந்தன் செய்கையை வர்ணிக்கும் வார்த்தை எது?—சுறுசுறுப்பான, சோம்பலான, கீழ்ப்படிதலுள்ள, சமயோசிதமான.

3. கோபாலனுக்கு அவன் மாமா மிட்டாய் வாங்கிக் கொடுத்தார். அவன் அதைத் தின்று கொண்டிருக்கும்பொழுது,பக்கத்து வீட்டு சபாபதி வந்தான். அவன் கையில் முறுக்கு வைத்திருந்தான். சபாபதியைக் கண்டதும், கோபாலன் மிட்டாயை மறைத்துக்கொண்டான். கோபாலனைப் பார்த்த சபாபதி, தன்னிடமிருந்த முறுக்கை ஒடித்து, ஒரு துண்டைக் கோபாலனுக்குக் கொடுத்தான். கோபாலன் அதை வாங்கிக் கொண்டு தூரப் போய்விட்டான்.

கோபாலன் குணத்தை எந்த வார்த்தை வர்ணிக்கும்?—பொறுமையுள்ள, சுயநலமுள்ள, பேராசையுள்ள அன்பான.

4. மருதாசலம் வீட்டுக்கு வந்தவுடன் புத்தகங்களை ஒரு மூலையில் எறிந்தான். சட்டையைக் கழற்றித் தொட்டிலில் போட்டான். தொட்டிலில் குழந்தை தூங்குவதையும் கவனிக்கவில்லை. கூஜாவிலிருந்து டம்ளரில் தண்ணீர் சரித்துக் குடித்தான். சரிக்கும்போது ஜலம் கீழே வழிந்து ஓடிற்று. பெஞ்சியின் கீழேயிருந்து பந்தை எடுத்தான். பக்கத்திலிருந்த கூடை சாய்ந்து, அதிலிருந்த பருப்பு கீழே கொட்டியது. ஒன்றையும் கவனியாமல் பந்தை எடுத்துக் கொண்டு விளையாடப் போய்விட்டான்.

எந்த வார்த்தை மருதாசலத்தின் குணத்தை விவரிக்கும்?—சோம்பலான, ஒழுங்கில்லாத, பயந்த, உபகாரமுள்ள.

## மொழிப் பயிற்சி

அடியிற் கொடுத்துள்ள ஜோடி வாக்கியங்களை ஒரே வாக்கியமாகச் சேர்த்து எழுது:

மாதிரி: ராமன் பல் விளக்கினான். ராமன் முகம் கழுவினான்.

ராமன் பல் விளக்கி முகம் கழுவினான்.

1. தம்பி புத்தகத்தை எடுத்துக்கொண்டான். தம்பி பள்ளிக்கூடம் போனான்.

2. பழனியப்பன் சோறு சாப்பிட்டான். பழனியப்பன் கறி சாப்பிட்டான்.

3. மருதன் மாடுகளை வண்டியிலிருந்து அவிழ்த்து வந்தான் மாடுகளைக் கொட்டிலில் கட்டினான்.

4. கோபாலன் கிட்டிப் புள் ஆடினான். கோவிந்தன் கிட்டிப் புள் ஆடினான்.

———

# 27. நூல் நூற்றல்

**படித்து விடை சொல் :**

*1. இந்தப் பாடத்தில் வந்துள்ள கருவிகள் எவை ?*

*2. நூல் நூற்க ஆரம்பிக்குமுன் பஞ்சை என்ன செய்யவேண்டும் ?*

*3. ராட்டினத்தில் நூற்ற பிறகு என்ன செய்ய வேண்டும் ?*

நாம் கட்டும் வேஷ்டி நூலால் செய்தது. உனக்கு நூல் நூற்கத் தெரியுமா? வீண்பொழுது போக்காமல் ஓய்வு நேரங்களில் நூல் நூற்கப் பழகினுல் அது லாபகரமானது. குடும்பத்தில் ஒவ்வொருவரும் இவ்விதம் செய்துவந்தால் எல்லோருக்கும் வேண்டிய ஆடைகளை நமது நாட்டிலேயே தயாரித்துக்கொள்ளலாம்.



**பருத்தி எடுத்தல் :**—ஒவ்வொரு **வீட்டுக்** கொல்லைப்புறத்திலும் பருத்திச் செடிகளைப் பயிர்செய்யலாம். செடிகளில் காய்கள் முற்றி வெடிக்கும் பருவத்தில் பருத்தியைச் சேகரித்து வைத்துக் கொள்ளவேண்டும். பருத்தி விளைவதற்குக் கரிசல் நிலம் ஏற்றது.

**பருத்தி அறைத்தல்** :—சேகரித்த பருத்தியைக் காயவைத்து, கொட்டை வேறு, பருத்தி வேருகப் பிரிக்கவேண்டும். இவ்விதம் பிரித்தெடுப்பதைப் பஞ்சு அறைத்தல் என்பார்கள். இந்தப் படம் பருத்தி அறைக்கும் திரிமணை. பருத்திச் சுளைகளை



திரிமணை.

இம்மணையில் இட்டுக் கைப்பிடியைச் சுற்றினுல் உருளைகள் சுழலும்பொழுது, பஞ்சு பின்பக்கமும், கொட்டை முன் பக்கமுமாகப் பிரிந்து விழும். மூன்று வீசை பருத்திக்கு ஒரு வீசை பஞ்சும், இரண்டு வீசை பருத்திக்கொட்டையும் கிடைக்கும்.

**பஞ்சைப் பட்டை போடுதல்**:—கொட்டை நீக்கிய பஞ்சை வில்லால் அடித்து உதிர்த்துத் தூசி குப்பைகளை எடுத்துவிடவேண்டும். பின்பு இந்தப் பஞ்சை ஒரு பலகையின்மேல் வைத்துப் பல தடவை பிரித்துச் சேர்த்து உருட்டித் திரிபோல்

செய்துகொள்வார்கள். இதற்குப் பட்டை போடுதல் என்று பெயர். பட்டை போட்ட பருத்தியிலிருந்து மெல்லிய இழைகள் வரும்படி இழுத்தால் நூலாகும்.

**தக்ளியினால் நூல் நூற்றல்:**—இந்தப் படத்தில் ஒருவன் தக்ளியினால் நூல் நூற்பதைப் பார். மாக்கல்லில் துவாரம் செய்து ஒருகுச்சியைச் சொருகித் தக்ளிசெய்து கொள்ளலாம்; அல்லது அரையணா கொடுத்துக் கடையில் வாங்கிக்கொள்ளலாம். தக்ளியைக் கதிர் என்றும் சொல்வார்கள்.


தக்ளியில் நூற்றல்

பட்டையை இடது கையினால் பிடித்துக் கொண்டு, அதிலிருந்து நூல் இழுத்து முதலில் தக்ளியில் இணைத்துக் கொள்ளவேண்டும். பிறகு வலதுகை விரல்களால் கதிரைத் திரித்துச் சுழலச் செய்தால் கொஞ்சங் கொஞ்சமாக நூல் நீண்டு முறுக்கு ஏறும். முறுக்கேற்றிய நூலைத் தக்ளியின் குச்சியில் அப்போதைக்

கப்போது சுற்றிக்கொள்ளவேண்டும். நன்ருய்ப் பழகியவர்கள் தக்ளியினுல் ஒரு மணி நேரத்தில் இருநூறு கஜம் வரை நூற்க முடியும்.

**ராட்டையினுல் நூற்றல்:**—அதிகமாக நூல் நூற்பதற்கு ராட்டினம் என்ற இயந்திரத்தை உபயோகிக்கலாம். இதில், அச்சில் சுழலும் சக்கரம் ஒன்று கயிற்றினுல் மற்ருெரு கோடியிலுள்ள கதிரில் இணைக்கப்பட்டிருக்கும். பிடியைப் பிடித்துச் சக்கரத்தைச் சுழற்றினுல் ராட்டையின் ஒரு சுற்றிற்குக் கதிர் அதிவேகமாகப் பல தடவை சுழலும். படத்தில் பஞ்சுப் பட்டையிலிருந்து. நூல் கதிரில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இடது கையில பருத்தியைப் பிடித்து இழை இழைத்துக் கதிரோடு சுற்றி வலது கையினுல் சக்கரத்தைச் சுழற்றினுல் மெல்லிய நூல் வரும். நூலில் முறுக்கேற்றிய பிறகு அதைக் கதிரில் சுற்றிவிட வேண்டும். ராட்டையினுல் ஒரு மணி நேரத்தில் முந்நூறு கஜம் வரை நூல் நூற்க முடியும்.



**நூலைத் திரிபோடுதல்:**—இரண்டடி தூரத்தில் இரண்டு முளைகளை ஒரு பலகையில் அடித்திருப்பார்கள். இதற்குக் கை வீசனம் என்று பெயர்.

கதிரில் சேர்ந்த நூலை மூளைக்கு மூளை சுற்றுவதால் பிரித்தெடுக்கலாம். இந்த நூல் திரியை எடுத்துக் குஞ்சமாக முறுக்கி வைத்துக்கொள்ள




கை வீசனம்

வேண்டும். இவ்விதக் குஞ்சங்கள் பல சேர்த்துக் கதர்க்கடை அல்லது சேணியரிடம் கொடுத்தால் பணம் கொடுப்பார்கள்.

இப்படிக் கையினல் நூற்ற நூல் கதர் நூல் எனப்படும். ஆனல் பெரிய பஞ்சு ஆலைகளில் இயந்திரங்களால் தற்காலத்தில் ஏராளமாக நூல் நூற்று வருகிருர்கள். அது ஆலை நூல் எனப்படும். சேணியர்கள் கதர் நூலைக்கொண்டு கதர் ஆடைகளும், ஆலை நூலைக் கொண்டு வேறு வகை நாட்டு வேஷ்டிகளும் தறியில் நெய்து விற்பார்கள்.



### மொழிப் பயிற்சி

1. பஞ்சைப் பட்டை போடவும், கதிரில் நூற்கவும் பழகிக்கொள்.

2. ஒரு ரூபாய் எடை நூல் 21 கஜம் நீளமிருந்தால், அது ஒன்றும் நம்பர் நூல் எனப்படும்.

3. ஒரு ரூபாய் எடை நூல் 630 கஜம் நீளம் இருந்தால், அது 30 நம்பர் நூல் ஆகும். நம்பர் அதிகமானால், நூல் மெல்லியதாக இருக்கும்.

மூன்று ரூபாய் எடை நூல் 3,780 கஜம் இருந்தால் நூலின் நம்பர் என்ன ?

4.

| | |
|---|---|
| தூங்கு — தூக்கம் | ஓடு — ஓட்டம் |
| நெய் — நெய்தல் | பழகு — பழக்கம் |
| திரி — திரித்தல் | பேசு — பேச்சு |
| வா — வருகை | கொடு — கொடுத்தல் |
| வாசி — வாசிப்பு | பார் — பார்வை |

இவ்விதம் வினைச் சொற்களிலிருந்து பெயர்ச் சொற்கள் ஆக்கலாம் நெய்தல், திரித்தல், பேச்சு, வருகை இவை தொழிற்பெயர்கள் எனப்படும்.

5. (க) ஒரு வாக்கியத்தில் பல சொற்கள் இருந்தாலும் எழுவாயும் பயனிலையும் முக்கியமானவை. இவைகளில்லாமல் வாக்கியம் அமையாது.

'அண்ணனும் தம்பியும்' என்பது வாக்கியமல்ல. 'அண்ணனும தம்பியும் வந்தார்கள்.'—இதில் எழுவாய், பயனிலை இருப்பதால் இது வாக்கியம் ஆகும்.

(ங) பொருத்தமான எழுவாய் எழுது.

1. —— ஊளையிடுகிறது.
2. —— கனைக்கிறது.
3. —— மலர்கின்றன.
4. —— மாலைகள் கட்டுகிருள்.
5. —— துணி நெய்வான்.
6. —— துணி தைப்பான்.

(ச) பொருத்தமான பயனிலை எழுது :

1. குடியானவர் ஏர் ——.
2. பசுக்கள் புல்லை ——.
3. பட்சிகள் ஆகாயத்தில் ——.

4 தோட்டத்தில் செடிகள் ——.
5. நேற்று மழை ——.
6. பையன் பந்து ——.

---

# 28. ராட்டினம்

1. ராட்டினத்தைச் சுற்றிடுவோம் தோழமாரே !—நம்
நாட்டின் நன்மை நாடிடுவோம் தோழமாரே !
2. பட்டை போட்ட பஞ்சினாலே தோழமாரே !—மிக
நுட்பமான நூலிழைப்போம் ராட்டையாலே !
3. பாட்டிமார்கள் காலத்திலே தோழமாரே !—நமது
வீட்டில் நூலைக் குவித்திருந்தார் ராட்டையாலே !
4. உடுக்க ஆடை உகந்தளிக்கும் தோழமாரே!—நமது
உயர்ந்த மானம் காத்திடுமே ராட்டையாலே !
5. மேழிச் செல்வம் ஓங்கிடுமே தோழமாரே !—பல
ஏழை பாழை பிழைத்திடுவார் ராட்டையாலே !
6. நாட்டுத் துணி மலிந்திடுமே தோழமாரே !—நம்மை
வாட்டி நிற்கும் வறுமை ஓடும் ராட்டையாலே !
7. வம்பளக்கும் நேரத்திலே தோழமாரே !—நீங்கள்
லாபம் பெற்றே மகிழ்ந்திடுவீர் ராட்டையாலே !
8. பாரதத் தாய் மக்களான தோழமாரே !—நாம்
தேசத் தொண்டு செய்திடுவோம் ராட்டையாலே !

### மொழிப் பயிற்சி

i. உகந்து அளிக்கும் = சந்தோஷத்தோடு கொடுக்கும். மேழிச் செல்வம் = கலப்பையால் உழுது பயிர் செய்து சம்பாதிக்கும் பொருள். வறுமை = தரித்திரம், பணமில்லாமை. பாரத மக்கள் = இந்தியாவிலுள்ள ஜனங்கள்.

ii. ராட்டினத்தால் எப்படி ஏழைகள் பிழைத்திடுவர் ?

iii. ராட்டினம் சுற்றப் பழக்கிக்கொள்.

iv. ங், ஞ், ந், ன், ண், ம்,—இந்த எழுத்துக்களுடன் சேர்ந்துவரும் எழுத்துக்களைக் கவனி :

1. வயிறு மந்தமாயிருந்தால் இஞ்சித்தூள் கலந்த கஞ்சி குடி.

2. ஆற்றங்கரையில் கன்றுக்குட்டி நின்றுகொண்டிருந்தது.

3. இன்று சங்கரனும் கங்காதரலும் வந்தார்கள்.

4. நரிக்குக் கொண்டாட்டம்; நண்டுக்குத் திண்டாட்டம்.

5. தம்பி பம்பரம் விடும்போது கம்பத்தில் முட்டிக்கொண்டான்.

எந்தெந்த எழுத்துடன் எந்தெந்த எழுத்துச் சேரும் ? ங்-க; ஞ்-ச; ந்-த; ண்-ட; ன்-ற; ம்-ப.

v. பூர்த்தி செய் :

1. மரு—து வா—கி வா. (ன், ந், ங், ஞ்)

2. வ—டல் மண். வய—க்கு நல்ல எரு. (ன், ண், லு, ழு, ளு).

3. சு—தரம் க—கள் சிவ—திருந்தன. (ண், ந், ன்)

4. வி—ம் ப—ம் ப— —த்தில் வி—ந்தது. (லா, ளா; ள, ழ; ல்ல, ள்ள; லு, ழு, ளு.)

# 29. பந்தய விளையாட்டுக்கள்

**விடை கண்டுபிடி:**

1. இந்தச் சம்பாஷணையில் எத்தனை பேர் பேசுகிறார்கள்?

2. ஸரோஜாவின் அண்ணன் யார்?

3. இருவர் ஜோடியாகப் பரிசு பெறக்கூடிய பந்தய விளையாட்டுக்கள் எவை?

4. வகுப்பு முன் சென்று ஊசி நூல் விளையாட்டு, நாற்காலி விளையாட்டு, கணிதப் பந்தயம் இவைகளை விளக்கிச் சொல்.

**மாணிக்கம்:** மணி, வா! என்ன செய்தி?

**மணி:** நமது பாடசாலையில் வருஷாந்தரப் பந்தய விளையாட்டுக்கள் இன்று சாயங்காலம் நடக்கப்போவதை மறந்துவிட்டாயா? அதற்கு உன்னைக் கூப்பிட வந்தேன்.

**மாணிக்கம்:** மணி, நீ எந்தப் பந்தயங்களில் சேர்ந்திருக்கிறாய்?

**மணி:** நூறு கஜ ஓட்டம், மூன்று கால் ஓட்டம், கோணிப்பை ஓட்டம் இவைகளில் ஓடப்போகிறேன்.

**ஸரோஜா:** (மாணிக்கத்தின் தங்கை): அண்ணா! கோணிப்பை ஓட்டம் என்றால் என்ன?

**மாணிக்கம் :** சாதாரண சாக்குப் பை ஒன்றி னுள் கால்களை விட்டு, இடுப்பு வரை அதை இழுத்துக் கட்டிக்கொண்டு ஓடுதல். இவ்விதம் பல பேர்கள் ஓடுவதில் வேகமாக முதலில் வருப வருக்குப் பரிசு அளிக்கப்படும்.

**ஸரோஜா :** ஓகோ! அது வெகு வேடிக்கை யாக இருக்கும்.

**மணி :** ஸரோஜா! பெண்களுக்கும் பந்தய விளையாட்டுக்கள் இருக்கின்றனவே! நீ எதிலா வது சேர்ந்திருக்கிறாயா!

**ஸரோஜா :** ஊசி நூல் விளையாட்டு, மெழுகு வர்த்தி ஓட்டம், நாற்காலியைச் சுற்றி ஓடுதல் இவைகளில் சேரப் பெயர் கொடுத்திருக்கிறேன்.

**மணி :** இவைகள் புதுமையாக இருக்கின் றனவே! இவைகள் நடத்தப்படும் விதத்தை உபாத்தியாயர் விளக்கினாரா?

**ஸரோஜா :** ஆமாம். ஊசி நூல் விளையாட் டில் ஊசி ஒன்றை நான் வைத்துக்கொண்டிருப் பேன். எனது தோழி ஒருத்தி குறிப்பிட்ட ஓரிடத்திலிருந்து ஓடி வந்து ஒரு நூலை என் னிடம் கொடுப்பாள். சரேலென்று அதை நான் ஊசியில் கோத்து அவளிடம் கொடுப்பேன். அவள் அதை எடுத்துக்கொண்டு வேகமாக முன்

இருந்த இடத்திற்கு ஓடி அங்குள்ள உபாத்தி யாயரிடம் கொடுப்பாள். இவ்விதம் பல பெண்கள் ஓடுவதில் யாவர் ஊசியில் நூலைக் கோத்தும், வேகமாக ஓடியும் முதலில் வந்து சேருகிறார் களோ, அந்த ஜோடிப் பெண்களுக்குத்தான் பரிசு கிடைக்கும்.

ஒரு மெழுகுவர்த்தியை ஏற்றிக் கையில் எடுத்துக்கொண்டு ஓடவேண்டும். ஏற்றிய வர்த்தி அணையக்கூடாது. முதலில் ஓடி வந்து சேர வேண்டும். இந்தப் பந்தயத்திற்கு மெழுகு வர்த்தி ஓட்டம் என்று பெயர்.

மாணிக்கம் : நாற்காலி விளையாட்டை நான் பார்த்திருக்கிறேன். அது மிகவும் விநோதமா யிருக்கும். ஒரு வட்டமான கோட்டில் பந்தயத் திற்கு ஓடும் பெண்கள் நிற்கவேண்டும். விளை யாடுபவர்களின் தொகையில் ஒன்று குறைவான எண்ணிக்கையுள்ள நாற்காலிகள் வட்டத்தின் நடு வில் போடப்பட்டிருக்கும். பந்தயம் விடுபவர் ஓர் ஊதலை ஊத ஆரம்பித்து ஊதிக்கொண்டே யிருப்பார். உடனே வட்டத்தைச் சுற்றிப் பந்த யக்காரர்கள் ஓடிக்கொண்டிருக்கவேண்டும். ஊது வதைத் திடீரென்று நிறுத்தியவுடன், ஒவ்வொரு பெண்ணும் வேகமாக ஓடி ஒவ்வொரு நாற்காலி யில் உட்காரவேண்டும். மெதுவாகக் கடைசி

யில் வரும் பெண் மட்டும் உட்கார நாற்காலி கிடைக்கால் ஏமாந்துவிடுவாள். அவளை நீக்கி விட்டு, ஒரு நாற்காலியை எடுத்துவிடுவார்கள். முன்போலவே மறுபடியும் பந்தயம் விடப்படும்.



இன்னொரு கடைசிப் பெண் நீக்கப்படுவாள். இப்படியே, ஒரு நாற்காலியும் இரண்டு பெண்களும் மிகுதியாகும் வரையில் செய்து வரவேண்டும். கடைசியில் அவ்விருவர்களில் எவள் முன்னதாக ஓடி அந்த நாற்காலியில் உட்காருகிருளோ அவளே ஜயமடைந்தவள். இந்த விளையாட்டைப் பையன்களும் விளையாடலாம்.

**மணி** : மாணிக்கம்! நீ சேர்ந்திருக்கிற விளையாட்டுகளைச் சொல்லவில்லையே!

மாணிக்கம் : எனக்கு வேகமாக ஓடப் பழக்கம் இல்லாததால் தரையில் தாண்டுதல், கணிதப் பந்தயம், கயிறு பிடித்து இழுத்தல் இம் மூன்றுக்கும் பெயர் கொடுத்திருக்கிறேன்.

ஸரோஜா : அண்ணு ! கணிதப் பந்தயம் எவ்வாறு விடப்படும் ?

மாணிக்கம் : கணிதப் பந்தயத்தில் என் தோழன் ஒருவன் ஓடி வந்து கணக்கு எழுதிய காகிதம் ஒன்றை என்னிடம் கொடுப்பான். நான் கணக்கைச் சரிவரத் துரிதமாகச் செய்து, விடையை எழுதி அவனிடம் கொடுப்பேன். அதை வாங்கிக்கொண்டு வேகமாக ஓடிப் பந்தயம் விட்டவரிடம் அவன் கொடுக்கவேண்டும். இவ்வாறு பலர் கொண்டுவந்து கொடுப்பதில், சரியான விடையுடன் வந்தவர்களில் எவன் முதல்வனே அவன் ஜயித்தவன். அவனுக்கும், சரியாகக் கணக்கைச் செய்து கொடுத்த அவனது தோழனுக்கும் இனம் வழங்குவார்கள். முதலில் ஓடி வந்தாலும் விடை சரியாக இல்லாவிட்டால் பரிசு கிடைக்காது.

மணி : என் தம்பி இரத்தினம் கூட நொண்டி ஓட்டம், உருளைக்கிழங்குகளை அல்லது கற்களை வரிசையாக வைத்துப் பொறுக்குதல்,

சிறு கரண்டியில் எலுமிச்சம்பழம் ஒன்றை ஏந்திக்கொண்டு அது கீழே விழாதவாறு ஓடுதல் முதலிய பந்தயங்களில் சேர்ந்திருக்கிறான்.

**மாணிக்கம் :** சரி, நேரமாகிவிட்டது. நீ வீடுசென்று உன் தம்பியுடன் தயாராக இரு. சற்று நேரத்திற்குப் பிறகு ஸரோஜாவும் நானும் உங்கள் வீட்டிற்கு வருகிறோம். அங்கிருந்து பந்தய விளையாட்டு நடைபெறும் இடத்திற்கு நாம் அனைவரும் சேர்ந்து செல்லுவோம்.

**மொழிப் பயிற்சி**

i. **பூர்த்தி செய் :**

1. கரண்டியில் — ஏந்திக்கொண்டு — சுந்தரம் — வராததால் பந்தயம் தோற்றான்.

2. கமலம்—அவியாமல் ஏந்திக்கொண்டு முதலில் — பந்தயம் ஜயித்தாள்.

ii. கீழ்க்கண்டவைகளில் உனக்குப் பழக்கமில்லாதது எது ?

அதற்கு அருகில் இந்த × அடையாளம் குறி.

| | |
|---|---|
| 1. கயிறு தாண்டுதல் | 5. மூன்று கால் ஓட்டம் |
| 2. பச்சைக்குதிரை தாண்டுதல் | 6. நீந்துதல் |
| 3. நாற்காலி விளையாட்டு | 7. மரம் ஏறுதல் |
| 4. கால்பந்து அடித்தல் | 8. சைகிள் விடுதல் |

iii. 1. நான் நேற்று கோவிலுக்குப் போனேன்.
அவன் இப்போது எழுதுகிறான்.
அப்பா நாளைக்கு வருவார்.

இவைகளில் 'போனேன்' — இறந்தகாலம்.
'எழுதுகிறேன்' — நிகழ்காலம்.
'வருவார்' — வருங்காலம்.

2. இந்த மூன்று காலங்களையும் தெரிவிக்க வினைச்சொல் அடையும் மாறுதலைக் கவனி.

| | | |
|---|---|---|
| குடித்தேன் | வந்தான் | எழுதினார்கள் |
| குடிக்கிறேன் | வருகிறான் | எழுதுகிறார்கள் |
| குடிப்பேன் | வருவான் | எழுதுவார்கள் |

3. பின்வரும் வாக்கியங்களில் வினைச்சொற்களின் காலம் சரியாக இல்லை. திருத்தி வாசி.

கிருஷ்ணன் நேற்று பந்து ஆடுகிறான். அப்போது கல் தடுக்கிக் கீழே விழுவான். காலில் சிராய்த்து ரத்தம் வரும். அண்ணன் 'டிஞ்சர்' மருந்து தடவுகிறான். நாளை காயம் ஆறிவிட்டது.

---

# 30. பத்திரிகைச் செய்தி II

இவை தினசரிப் பத்திரிகைகளில் வந்த செய்திகள். இவற்றை ஐந்து நிமிஷத்திற்குள் படித்து விடை சொல்.

1. முதல் செய்தி எந்த ஊரில் நடந்தது? தங்கம் பஸ்ஸுக்கு இடையே செல்லக் காரணம் என்ன? டிரைவர் பெயர் என்ன? விபத்து எந்தக் கிராமத்தில் ஏற்பட்டது?

2. தரங்கம்பாடியில் அதிக மழையால் ஏற்பட்ட சேதம் என்ன?

3. வேளாங்கண்ணியில் என்ன உத்ஸவம்? ரயில் கம்பெனியார் என்ன வசதிகள் இந்த வருஷம் செய்திருந்தார்கள்? வேளாங்கண்ணியில் ரயில் ஸ்டேஷன் உண்டா?

4. விளக்கிச் சொல் : மாதர்கோவில், மகசூல், கோர.

5. ஏன் *** இந்தக் குறிகள் போடப்பட்டுள ?

# புதுவைக் கருகில் கார் விபத்து

## ஒரு ஸ்திரீ இறந்தாள்

புதுச்சேரி, செப். 4—

நேற்று மாலை கூடலூர்- புதுச்சேரி ரஸ்தாவில் தாவல குப்பத்துப் பக்கத்தில் ஒரு கோர மோட்டார் விபத்து ஏற்பட்டது. 27 வயதுள்ள தங்கம் என்ற ஸ்திரீ இவ்விபத்துக்குள்ளாகி இறந்துவிட்டாள். தங்கம் தன்னுடைய குழந்தையைக் கார் போகும் வழியிலிருந்து இழுக்க முயற்சித்ததாயும், அப்போது பஸ் அவள் மீதேறிவிட்டதாயும் கூறப்படுகிறது. டிரைவர் சையது, கைது செய்யப்பட்டிருக்கிறார். விசாரணை நடந்து வருகிறது.

# மழையினால் சேதம்

தரங்கம்பாடி, நவ. 1—

இரண்டு நாட்களாக விடா மழை பெய்து கொண்டிருக்கிறது. பள்ளிக்கூடங்கள் எல்லாம் சாத்தப்பட்டன. பழைய வீடுகள் விழுந்து சேதம் ஏற்பட்டிருக்கிறது. அறுவடைக்குத் தயாராயிருந்த குருவை மகசூல் ஜலத்தில் மூழ்கி மிராசுதார்களுக்கு அதிக நஷ்டம். தொடர்ச்சியாய் மழை பெய்ததால் பெருவெள்ளம் ஏற்படும்போல் தெரிகிறது.

## வேளாங்கண்ணி உத்ஸவம்

(நமது நிருபர்)

ஆரோக்கியமாதா உத்ஸவம் வழக்கம்போல் வெகு விமரிசையாக நடந்தேறியது. இருபதினாயிரம் ஜனங்களுக்கு மேல் ரயில் மூலமாய் விஜயம் செய்திருந்தார்கள். தென்னிந்திய ரயில்வே கம்பெனியார் பிரயாணிகளுக்குச் சகல வசதிகளும் செய்து கொடுத்திருந்தார்கள்.

* * * *

இந்த வருஷம் வேளாங்கண்ணியிலே பிரயாணிகளின் சௌகரியத்திற்காக டிக்கெட் கொடுக்கும் இடம் ஏற்பாடு செய்ததுடன், பிரயாணிகள் கோயில் பக்கத்திலிருந்தே பஸ்ஸில் ஏறிக்கொண்டு வருவதற்கும் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

———

# 31. உலோகங்கள்

**படித்தறிந்து சொல் :**

1. கலப்பு உலோகம் என்றால் என்ன ?

2. வெண்கலத்திலும், ரூபாய் நாணயத்திலும் என்ன உலோகங்கள் கலந்திருக்கின்றன ?

3. இப்பாடத்தில் சொல்லப்பட்ட உலோகங்கள் எத்தனை ? திரவ ரூபமான உலோகம் எது ?

4. முலாம் பூசுதல், ஜப்பான், சரிகை, களிம்பு — இச் சொற்கள் வந்துள்ள வாக்கியங்களைக் கண்டுபிடி. அவைகளைப்போல் உன் சொந்த வாக்கியங்களில் இந்தச் சொற்களை உபயோகி.

5. நாலாவது பாரா எதைப்பற்றிச் சொல்லுகிறது?

6. உலோகப் பொருளின் குணங்கள் எவை?

7. ஈயப்பாத்திரம், செப்புப் பாத்திரம் இவைகளை உபயோகிப்பதில் நாம் எவ்விதங்களில் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்?

1. பூமியிலிருந்து வெட்டி யெடுக்கப்படும் கல், மண், நிலக்கரி, பொன், வெள்ளி, இரும்பு முதலியவை **தாதுப் பொருள்**களாம். இவைகள் வெட்டி எடுக்கப்படும் இடம் **சுரங்கம்** அல்லது **கனி** எனப்படும். இத்தாதுப் பொருள்கள் பளுவும், பளபளப்பும், ஒருவித நாதமும் உள்ளவை. இவைகளை அனலில் உருக்கித் தகடாகவும் அடிக்கலாம்; கம்பியாகவும் நீட்டலாம். ஆதலால் இவைகள் **உலோகங்கள்** எனப்படுகின்றன. அவ்விதமில்லாத கல், நிலக்கரி, கந்தகம் முதலியவைகள் உலோகப் பொருள்களாகா.

2. பொன், வெள்ளி, இரும்பு, செம்பு, ஈயம் இவ்வைந்தும் பஞ்ச உலோகங்கள் எனப்படும். இவைகளையன்றித் தற்காலத்தில் சுமார் ஐம்பது வேறு உலோகங்களும் கண்டறியப்பட்டுள்ளன. துத்தநாகம், அலுமினியம், நிக்கல், பாதரசம் முதலியனவும் உலோகங்களே. பாதரசம் சாதாரணமாகத் திரவரூபமாக இருக்கும்.

3. இரண்டு பங்கு செம்பும், ஒரு பங்கு துத்தநாகமும் சேர்த்து உருக்கினால் பித்தளையாகும். செம்பும், வெள்ளீயமும், சிறிது துத்தநாகமும் கலந்து உருக்கி வார்த்தது வெண்கலம். பித்தளையும் வெண்கலமும் தனி உலோகங்களாகும். ரூபாயும் சவரனும் கலப்பு உலோகங்களால் செய்யப்படுவனவே. ரூபாயில் 93 பங்கு வெள்ளியும், 7 பங்கு செம்பும் சேர்ந்திருக்கின்றன. சவரனில் 22 பங்கு தங்கமும், 2 பங்கு செம்பும் கலந்திருக்கின்றன.

4. சுரங்கங்களிலிருந்து வெட்டி எடுக்கப்படும் உலோகங்கள் தனித்த பொருளாகக் கிடைப்பதில்லை. அவை மற்ற பொருள்களோடு கலந்தேயிருக்கும். கலப்புள்ள உலோகக் கட்டிகளை வெட்டியெடுத்துப் பெரிய உலைகளில் இட்டுக் காய்ச்சி, இதர பொருள்களையும் அசுத்தங்களையும் போக்கித் தனி உலோகத்தைப் பிரித்தெடுப்பார்கள். நம் நாட்டில் உலோகப் பொருள்கள் அதிகமாகக் கிடைப்பதில்லை. பெரும்பாலும் வெளி நாடுகளிலிருந்தே அவைகள் வருகின்றன.

5. பொன்னும் வெள்ளியும் உயர்ந்த உலோகங்கள். இவை பளபளப்பாயும், துருப்பிடியாமலும், களிம்பு ஏறாமலும் இருப்பதால் நகை, பாத்திரம், சரிகை முதலியவைகள் செய்யப்

பயன்படுகின்றன. இவை மற்ற உலோகங்களை விடப் பளுவுள்ளவை. இவற்றின் விலையும் அதிகம்.

6. செம்பு முதலிய தாழ்ந்த உலோகங்களால் செய்த பாத்திரங்களுக்கும் நகைகளுக்கும் பொன்னால் முலாம் பூசினால், அவை பொன்னைப் போலவே தோன்றும். மின்சாரத்தின் உதவியால் பொன் முலாம் பூசுவார்கள். அதைப்போலவே வெள்ளி முலாம் பூசுவதுமுண்டு.

7. செம்பு அல்லது தாமிரமானது மங்கிய சிவப்பு நிறமுள்ள ஓர் உலோகம். பொன், வெள்ளி இவைகளைவிட எளிதில் அதிகமாக அகப்படுவதால் இது மிகவும் குறைந்த விலையுடையது. இதைத் தகடுகளாக்கித் தவலை, குடம், கொப்பரை முதலிய பாத்திரங்கள் செய்கிறார்கள். செம்மில் அதிகச் சீக்கிரம் களிம்பு ஏறும். இக்களிம்பு விஷத்தன்மையுள்ளதாகையால், போஜன பதார்த்தங்கள் வைப்பதற்கு உபயோகிக்கவேண்டின் இப்பாத்திரங்களுக்கு வெள்ளீயம் பூசுவது அவசியமாகும்.

8. உலோகங்களில் மிகவும் உபயோகமானது இரும்பு. இதனால் சிறிய ஊசி முதல் பெரிய ரயில் எஞ்சின் வரை பலவிதச் சாமான்கள்

செய்யப்படுகின்றன. இரும்பைக் கரும்பொன் என்று சொல்வதுண்டு. இரும்பு சீக்கிரம் துருப் பிடித்துக் கெடுமாகையால் இரும்புச் சாமான் களுக்கு இனமல் அல்லது 'ஜப்பான்' என்ற ஒரு விதக் கருப்பு வர்ண எண்ணெய் பூசுகிறார்கள். இரும்புத் தகடுகளை உருக்கிய வெள்ளீயத்தில் தோய்த்துத் தகரம் செய்யலாம். சாதாரண இரும் பில் சிறிது கரி சேர்த்துக் காய்ச்சி எஃகு செய் கிறார்கள். இரும்பைவிட இது மிகவும் உறுதி யானது.

9. வெள்ளீயம், காரீயம் என்று ஈயத்தில் இருவகையுண்டு. வெள்ளீயம் நிறத்தில் மங் காது; காரீயம் கறுத்துவிடும். காரீயத்தினால் காகிதத்தின் மேல் கோடு கிழித்தால், பென்சில் கோடுபோலத் தெரியும்; வெள்ளீயத்தினால் அவ் விதக் கோடு உண்டாகாது. வெள்ளீயப் பாத்தி ரங்களில் புளிப்பான பதார்த்தங்கள் வைத்தால் கைத்துப் போவதில்லை; காரீயப் பாத்திரங்களில் அவை கைத்துப்போகும். ஆதலால் வெள்ளீயத் தைப் பாத்திரங்கள் செய்யவும், காரீயத்தைத் துப்பாக்கிக் குண்டுகளும், அச்சு எழுத்துக்களும் செய்யவும் உபயோகிக்கிறார்கள். அவ்விருவித ஈயமும் அனலில் சீக்கிரம் உருகுமாதலால், தண் ணீரில்லாமல் அடுப்பில் இப் பாத்திரங்களை

வைக்கக்கூடாது. இவைகள் தவறிக் கீழே விழுந்தால் சீக்கிரத்தில் நசுங்கும்; இவ்விஷயத்திலும் நாம் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

10. துத்தநாகத் தகடுகளைத் தண்ணீர் தூக்கும் வாளிகள், குடம் தோண்டி முதலியவை செய்யவும், கூரை போடவும் உபயோகிக்கிறார்கள் நிக்கல் உலோகத்தினால் அரையணா முதல் ஒரு ரூபாய் வரையிலான நாணயங்கள் செய்யப்படுகின்றன.

11. புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட அலுமினியம் களிமண்ணிலிருந்து எடுக்கப்படுகிறது; அது இலேசாக இருப்பதாலும், விலை சகாயமாக இருப்பதாலும் அலுமினியப் பாத்திரங்களைப் பலரும் உபயோகிக்கிறார்கள்.

### மொழிப் பயிற்சி

i. சொல் விளக்கம் :—பஞ்ச = ஐந்து. நாதம் = சப்தம். முலாம் = பூச்சு. எச்சரிக்கையாக = ஜாக்கிரதையாக. சகாயமாக = மலிவாக. களிம்பு = நீல நிறமான ஒருவித விஷப்பொருள். சவரன் = பவுன். அனல் = நெருப்பு. கைத்து = கசந்து.

ii. இந்தத் தன்மை எந்த உலோகத்திற்கு உண்டு?

1. கீழே விழுந்தால் உடையும்.
2. காகிதத்தில் கிழித்தால் கோடு தெரியும்.
3. துருப் பிடிக்கும்.
4. அடுப்பில் வைத்தால் உருகும்.
5. களிம்பு ஏறும்.

6. கீழே சிந்தினால் ஓடும்.
7. அதிகப் பளுவுள்ளது.
8. நாணயங்கள் செய்யலாம்.
9. இலேசாக இருக்கும்.
10. மஞ்சள் நிறமுள்ளது.

iii. கீழ்க்கண்ட கட்டங்களில் பிரித்தெழுது.

| | | | |
|---|---|---|---|
| தேக்கு | மனிதன் | மாதுளை | நிலக்கரி |
| துத்தநாகம் | முத்து | வைரம் | பாராங்கல் |
| அரிசி | களிமண் | பட்டு | சர்க்கரை |
| பருந்து | காங்கரு | சிலந்தி | |
| பல்லி | கிராம்பு | வெள்ளி | |

| தாதுப்பொருள் | தாவரப் பொருள் | பிராணிப்பொருள் |
|---|---|---|
| | | |

**iv பெயரெச்சம் :**

**வந்த மனிதன் சென்றான்**

இந்த வாக்கியத்தில் வந்த, சென்றான் என இரண்டு வினைச் சொற்கள் இருக்கின்றன. ஆனால் பொருளை முடித்து நிற்கும் வினைச்சொல் 'சென்றான்' என்பது. இதை வினைமுற்று என்பார்கள். வினைமுற்று பயனிலையாக இருக்கும்.

ஆனால் 'வந்த மனிதன்' என்பதில் கருத்து முடியவில்லை. ஆதலால் வந்த என்னும் வினைச்சொல் முற்றுப்பெறாத எச்ச வினை எனப்படும். பெயர்ச்சொல்லைத் தழுவி நிற்கும் வினைச்சொல் பெயரெச்சம் ஆகும்.

இந்த வாக்கியங்களிலுள்ள பெயரெச்சங்களையும் வினைமுற்றுக்களையும் எடுத்து எழுது :

1. பொன்னும் வெள்ளியும் உயர்ந்த உலோகங்கள் ஆகும்.
2. பாடும் பறவையை வேடன் பிடித்தான்.
3. நிற்கின்ற பையனைக் கந்தன் கூப்பிட்டான்.
4. உழுத வயல் சேருயிருக்கும்.

v வினையெச்சம் :

இரும்பு துருப் பிடித்துக் கெடும்.

இந்த வாக்கியத்தில் பிடித்து என்பது எச்ச வினைச் சொல். ‘கெடும்’ என்னும் வினையை இது தழுவி நிற்கிறது. ஆதலால் பிடித்து என்பது வினையெச்சம் எனப்படும்.

இந்த வாக்கியங்களிலுள்ள வினையெச்சங்களையும் வினைமுற்றுக்களையும் எடுத்து எழுது :

1. கந்தன் நடந்து சென்றான்.
2. அவன் படித்தால் தேறுவான்.
3. ராமன் படித்துத் தேறினான்.
4. வாத்து குளத்தில் நீந்திச் செல்லுகிறது.

---

# 32. கடிதம் III

1. இந்தக் கடிதம் யார் எழுதியது? யாருக்கு?
2. பெரியோருக்கு எழுதவேண்டிய மரியாதைச் சொல் இதில் என்ன வந்திருக்கிறது?

இந்தக் கடிதத்தில் என்ன இரண்டு செய்திகள் தெரிவித்திருக்கின்றன?

மடவிளாகத் தெரு,
நாகப்பட்டினம்,
10—10—1939.

அன்புள்ள அப்பா அவர்களுக்கு,

அநேக நமஸ்காரம். நீங்கள் ஊருக்குச் சென்ற மறுநாள் தம்பிப் பாப்பாவுக்கு ஒரு ஆபத்து ஏற்பட்டது. தொட்டிலிலிருந்து கீழே விழுந்துவிட்டான். நல்ல வேளையாகப் பெருத்த காயம் ஒன்றும் ஏற்படவில்லை. தலையில் மாத்திரம் அடிபட்டு வீங்கிவிட்டது. மூன்று நாள் தைலம் தடவிய பிறகு, இப்போது குணமடைந்து வருகிறது. நீங்கள் கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம்.

நேற்று எங்கள் பாடசாலையில் பரிசு அளிக்கும் கொண்டாட்டம் நடந்தது. தாசில்தார் தலைமை வகித்தார். போட்டிப் பந்தயங்களில் கெலித்தவர்களுக்கும் பாடப்பரீட்சைகளில் முதன்மையாகத் தேறியவர்களுக்கும் பரிசுகள் கொடுத்தார். பாட்டுப் போட்டியில் ஒரு பரிசும், தையல் வேலையில் ஒரு பரிசும் எனக்குக் கிடைத்தன. அழகான பொம்மைகளுள்ள புத்தகம் ஒன்றும், பெரிய கண்ணாடி யொன்றும் எனக்குக் கொடுத்தார்கள். அவைகளைப் பார்த்து அம்மா மிகவும் சந்தோஷப்பட்டாள்.

இப்படிக்கு உங்கள் பிரியமுள்ள
லலிதா.

**விலாசம்:**
ஸ்ரீ கனகசபை முதலியார்,
35, மேல வீதி, சிதம்பரம்.

பயிற்சி

1. உன் ஊர்த் திருவிழாவுக்கு வரும்படி உன் மாமாவுக்கு ஒரு கடிதம் எழுது.

2. கடிதத்தில் எழுதுபவர் விலாசம் எதற்கு ?

3. இவைகளில் தவறு என்ன ? கண்டுபிடித்து விளக்கு.

I. மகா-ா-ா-ஸ்ரீ
அப்பா அவர்களுக்குக்
கொடுப்பது.
நாகப்பட்டினம்.

II. 'இந்தக் கடிதம் வந்து சேராவிட்டால்
உடனே தந்தியடிக்கவும்.

4. இந்தக் காலத்தில் தொலைவிலுள்ளவர்களுக்கு எந்தெந்த மூலமாய்ச் சமாச்சாரம் தெரிவிக்கலாம் ?

---

# 33. கதையின் வாக்கியங்களை வரிசைப்படுத்தி வாசி

இப்பாடத்தை மௌனமாக வாசித்துக் கதைத் தொடர்ச்சி விளங்கும்படி வாக்கியங்களை வரிசைப் படுத்தி 1, 2, 3 முதலிய இலக்கங்கள் இடு. பிறகு தொடர்ச்சியாக வாசி. கதைக்குப் பொருத்தமான பெயர் கொடு.

அவனைக் கண்டதும் திருடன் சரேலென்று இறங்கிவிட்டான். பாதி தூரம் ஏறினதும் மரத்துக்குச் சொந்தக்காரன் அவ்விடம் வந்தான். ஒரு

பக்காத் திருடன் ஒரு தென்னை மரத்தில் தேங்காய் பிடுங்க ஏறினன். திருடன், 'கன்றுக்குப் புல் பிடுங்க' என்று பதிலுரைத்தான். சொந்தக்காரன் அவனைப் பார்த்து, "என் என் தென்னை மரத்தில் ஏறினய்?" என்று கேட்டான். திருடன் தனக்குள் சிரித்துக்கொண்டு தன் வழியே சென்ருன். "தென்னைமரத்தில் புல் முளைக்குமா?" என்று சொந்தக்காரன் வினவினன். "சரி, போய் வா.' என்று சொந்தக்காரன் சொன்னன். "புல் இல்லை என்பதைப் பார்த்துவிட்டுத்தான் இறங்கி விட்டேன்" என்ருன் திருடன்.

பயிற்சி

i. *1.* திருடன் ஏன் தனக்குள் சிரித்துக்கொண்டான்?

*2.* மரத்தின் சொந்தக்காரன் சாமர்த்தியசாலியா?

*3.* "புல் இல்லாததனல்தான் இறங்கிவிட்டேன்" என்று திருடன் சொன்னல் நீ ஒப்புக்கொள்வாயா?

ii. "என் என் தென்னைமரத்தில் ஏறினய்?" என்று சொந்தக்காரன் கேட்டான்.

சொந்தக்காரன் சொல்லிய வார்த்தைகளைக் குறிக்கும் வாக்கியத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும் இந்த " " அடையாளங்கள் போட்டிருப்பதைக் கவனி. இவற்றிற்கு மேற்கோள் புள்ளிகள் என்று பெயர். இதே விதம் இக்கதையில் வேறு எந்த வாக்கியங்களிலே மேற்கோள் புள்ளிகள் வந்துள்ளன என்பதைக் கண்டுபிடித்து எழுது.

---

# 34. பத்திரிகைச் செய்தி III

## இந்தியாவின் திறமை

### ஸ்ரீமதி ருக்மணி அருண்டேலின் பிரசங்கம்

சைதாப்பேட்டை, நவ 15

"இந்தியக் கலை" என்னும் விஷயத்தைப்பற்றி ஸ்ரீமதி ருக்மணி அருண்டேல் இன்றுமாலை கிண்டி இஞ்சினியர் கலாசாலையில், கலாசாலையின் சங்கச் சார்பில் ஒரு பிரசங்கம் செய்தார். கலாசாலைப் பிரின்ஸிபால் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார்.

ஸ்ரீமதி ருக்மணி அருண்டேல் கூறியதின் சாராம்சமாவது.—இந்தியா பக்தியை முக்கியமாகக் கொண்ட ஒரு நாடு. இந்தப் பக்தியானது இந்தியச் சிற்ப சாஸ்திரத்தை உயர்த்தியிருக்கிறது. பக்தி விஷயமான காரியங்கள் எதுவும் இத் தேசத்தில் அழகுடன் விளங்கியிருக்கின்றன. தென்னாட்டுக் கோயில்களின் அழகும் சிறந்த சிற்ப வேலையும் நிகரற்றன. இந்தியாவின் சிறப்பு என்னவென்றால் வாழ்க்கையையும் அழகான சாமான்களையும் நாம் பிரிப்பதில்லை யென்பது; இந்தியர்களால் உபயோகிக்கப்படும் துணிகளும், மற்ற சாமான்களும் மிகவும் அழகு படைத்தவைகளாயிருந்தன. இந்தியாவின் பழைய சிற்ப சித்திர மேன்மையை மறுபடியும் நிலைநாட்டுவதற்கு நீங்கள் எல்லோரும் உதவ வேண்டும். இத்தேசத்துக்குச் சொந்தமான முறைப்படி நம்முடைய வாழ்க்கையை நாம் அமைத்துக் கொள்ளவேண்டும். முக்கியமாக நமது வீடுகளை அலங்கரிப்பதில் நம்முடைய பழைய முறையை நாம் அனுஷ்டிக்கவேண்டும். அப்பொழுது தான் மற்ற நாடுகள் இந்நாட்டை மதிக்கும். இந்தியாவிற்குச் சொந்தமான சிறந்த சிற்ப சாஸ்திரம் இருக்கிறது. அதற்குப் புத்துயிர் கொடுத்து உயிர்ப்பிக்க இத்தேசத்திற்குச் சக்தி உண்டு. இவ்விஷயத்தில் நீங்களெல்லோரும் உதவ வேண்டும்.

அக்கிராசனர் சில வார்த்தைகளைச் சொல்லியபின் சங்கக் காரியதரிசி வந்தனோபசாரம் கூறினார். பின்னர், கூட்டம் கலைந்தது.

—சுதேசமித்திரன்

## பயிற்சி

i. 1. இந்தப் பிரசங்கம் யார் செய்தது? எப்பொழுது? எங்கே?

2. இதில் வந்துள்ள ஆங்கிலப் பதங்களை எடுத்தெழுது.

3. இந்த அழகுக் கலைகளில் உபந்நியாசகர் பேசியவை எவை?

1. நாடகம்
2. சிற்பம்
3. சங்கீதம்
4. நாட்டியம்
5. சித்திரம்

ii. 1. இரண்டு வார்த்தைகளைச் சேர்க்கும்போது நடுவில் எழுத்துத் தோன்றும். இவ்விதம் தோன்றுவன சேர்க்கும் எழுத்துக்கள்.

**உதாரணம் :**

பூனைக்குட்டி. கதவைத் திற.
வயலைச் சுற்றிலும் கையைப் பிடித்தான்.
சேர்க்கும் எழுத்துக்களை எழுதி, சேர்த்து வாசி.

| | | |
|---|---|---|
| பலா காய் | வாயை கொப்புளி | மூக்கை சிந்து |
| பூ சோலை | கீரை தோட்டம் | பந்தை பிடி |
| எலி பொறி | வாழை கன்று | சோள கதிர் |

2. சில சமயம் இரண்டு வார்த்தைகளைச் சேர்க்கும்போது, சேரும் இடத்தில் உள்ள எழுத்து போய் விடும் அல்லது மாறும். கீழ்க்கண்டவற்றில் எப்படி மாறியிருக்கின்றன என்று பார்.

| | |
|---|---|
| பணங் காசு | மரஞ்செடி |
| தங்க நகை | பந்தடித்தான் |
| குரங்காட்டி | சோறுண்டான் |

———

# 35. கடிகாரம்

**படித்து விடை சொல்:**

1. இன்று என்ன கிழமை? இந்தக் கிழமை எப்பொழுது ஆரம்பித்தது? எப்பொழுது முடியும்? (இந்துக்கள் கணக்குப்படி, முஸ்லீம்கள் கணக்குப்படி, ஐரோப்பியர்கள் கணக்குப்படி)

2. 'கடிகாரங்களின் உருவங்களும் வகைகளும் பலவாருய் இருக்கின்றன.'—இந்த வாக்கியத்தைக் கண்டுபிடி.

3. நீ பார்த்துள்ள மூன்று வகைக் கடிகாரங்கள் சொல்.

4. கடிகாரத்திலுள்ள மூன்று முட்கள் எவை? ஒவ்வொன்றும் ஒரு நாளில் எவ்வளவு தட்வை சுற்றும்?

5. கடிகாரம் என்று ஏன் பெயர் வந்தது?

6. கடிகாரத்தின் முட்கள் எதனுல் ஓடுகின்றன?

1. சூரிய உதயம் முதல் சூரிய அஸ்தமனம் வரையில் உள்ள காலம் ஒரு பகல். சூரிய அஸ்தமனம் முதல் சூரிய உதயம் வரையில் உள்ள காலம் ஓர் இரவு. ஒரு பகலும் ஒரு இரவும் சேர்ந்தது ஒரு நாள் அல்லது ஒரு தினம். இந்துக்கள் ஒரு சூரியோதயம் முதல் மறு சூரியோதயம் வரை உள்ள காலத்தையே ஒரு தினமாகக் கணக்கிடுகிருர்கள். முஸ்லீம்கள் கணக்குப்படி, ஒரு சூரியாஸ்தமனம் முதல் மறு அஸ்தமனம் வரையில் உள்ள காலம் ஒரு நாளாகும். ஐரோப்

பியர்களின் கணக்குப்படி நாளானது நடு இரவில் ஆரம்பித்து மறு இரவில் பன்னிரண்டு மணி யோடு முடிகிறது.

2. இந்துக்கள் ஒரு தினத்தை அறுபது நாழிகைககளாகப் பிரித்து, சூரியனையும் நக்ஷத் திரங்களையும் பார்த்துக் காலத்தை அறிந்தார்கள். மேல்நாட்டார், பகலைப் பன்னிரண்டு சம பாகங்க ளாகவும், இரவைப் பன்னிரண்டு சம பாகங்க





ளாகவும் பிரித்திருக்கிறார்கள். அவ்வாறு பிரிந்த ஒரு பாகமே ஒரு மணி நேரமாம். இந்துக்கள் கணக்குப்படி இரண்டரை நாழிகை கொண்டது ஒரு மணி நேரமாகும்.

3. மேனாட்டார் ஒரு மணி நேரத்தை அறுபது நிமிஷங்களாகப் பிரித்திருக்கின்றனர். ஒரு நிமிஷத்தையும் அறுபது பாகமாகப் பிரித்து

அவற்றை 'செகண்டுகள்' என்கின்றனர். 'டிக் டிக்' என்பதற்குள்ள நேரமே ஒரு செகண்டு ஆகும்.

4. நாம் இக்காலத்தில் நேரத்தை கடிகாரங்களால் அறிகிறோம். கடிகாரங்களின் உருவங்களும் வகைகளும் பலவாறாய் இருக்கின்றன. ஆனால், கடிகார முகப்பிலுள்ள எண்களும், முட்களும் அமைப்பு முறையில் ஒரே மாதிரியாய் இருக்கின்றன. கடிகார முகவட்டத்தைக் கவனி. அதன் ஓரம் பன்னிரண்டு பெரும்பாகங்களாகப் பிரிக்கப்பட்டு இருக்கின்றது. நாம் அவற்றைப் பன்னிரண்டு எண்களால் அறிகிறோம். ஒவ்வொரு பெரும் பாகமும் சிறு கோடுகளால் ஐந்து சிறு பாகங்களாகப் பிரித்திருக்கிறது. பெரும் பாகங்களிலுள்ள சிறு கோடுகளை வரிசையாக எண்ணிப் பார். அறுபது சிறு கோடுகளிருக்கின்றன அல்லவா ? ஒவ்வொரு சிறு கோடும் நிமிஷத்தைக் குறிக்கின்றது. சில கடிகாரங்களில் வேறொரு சிறு வட்டமும் இருக்கும். அது செகண்டு வட்டமாம். அதிலும் அறுபது சிறு கோடுகள் காணப்படும். அச்சிறு வட்டத்தின் ஒவ்வொரு சிறு கோடும் ஒரு செகண்டைக் காட்டுகின்றது.

5. கடிகார வட்டத்தில்பெரியமுள்ஒன்றும், சிறிய முள் ஒன்றும் சுற்றிவருகின்றன. பெரிய முள் நிமிஷ முள் என்றும், சிறிய முள் மணி முள்

என்றும் பெயர்பெறும். செகண்டு வட்டத்தில் சுற்றும் முள் **செகண்டு முள்** எனப்படும். ஒரு செகண்டில் இந்த முள் ஒரு கோட்டைத் தாண்டி மறு கோட்டுக்குச் செல்லும். அப்படியே அறுபது செகண்டு ஆனவுடன் அது சிறு வட்டத்தை ஒரு முறை சுற்றும். அப்போது நிமிஷ முள் பெரு வட்டத்தில் ஒரு புள்ளிக் கோட்டிலிருந்து அடுத்த புள்ளிக் கோட்டிற்கு நகரும். அதுவே ஒரு நிமிஷ நேரமாம். அப்படியே நிமிஷ முள் பெருவட்டத்தை ஒரு முறை சுற்றும் போது அறுபது நிமிஷங்களாகும். அந்த நேரம் ஒரு மணி. மணி முள் கடிகார வட்டத்தை ஒரு முறை சுற்றும்போது பன்னிரண்டு மணி நேரமாகும்; இருமுறை சுற்றினால் ஒரு நாள் ஆகும்.

6. மணி முள் இருக்கும் இலக்கத்தைப் பார்த்து மணியையும், நிமிஷமுள் இருக்கும் கோட்டைக் கணக்கிட்டு நிமிஷத்தையும் சொல்லலாம். இவ்வாறே செகண்டையும் அறியலாம். கடிகாரத்தைப் பார்த்து மணி சொல்லப் பழகிக் கொள்.

7. கடிகாரத்திற்குச் சாவி கொடுப்பதைப் பார்த்திருக்கிறாயா? சாவி கொடுத்தால்தான் முட்கள் ஓடும்.

8. கடிகாரத்தின் உட்புறத்தைப் பார். அதற்குள் சில வில் கம்பிச் சுருள்கள் அசைகின்றன. பல் உள்ள சில சக்கரங்களும் சுற்றுகின்றன. நாம் சாவி கொடுக்கும்போது இந்தக் கம்பிச் சுருள்கள் முடுக்கப்பட்டுச் சுருங்கும் ; பிறகு கொஞ்சமாக விரியும். அப்போது அவற்றுடன் இணைக்கப்பட்ட சக்கரங்கள் சுழன்று கடிகார முட்கள் நகரும். இதுதான் கடிகார யந்திரத்தின் இரகசியம். கடிகாரங்களுக்கு ஒழுங்காகச் சாவி கொடுக்காவிட்டால் அவை பழுதாகிவிடும்.

9. கடிகை என்றால் நாழிகை. கடிகையைக் காட்டுவது கடிகாரம். படத்தில் காட்டியிருப்பதில் ஒன்று மேஜையில் வைக்கும் கடிகாரம் ; மற்றொன்று ஜோபியில் போட்டுக்கொள்வது.

### மொழிப் பயிற்சி

*1.* அர்த்தம் :—உதயம் = வெளித் தோன்றுதல். அஸ்தமனம் = மறைதல். மேனாட்டார் = மேற்கிலுள்ள தேசத்தார் ; ஐரோப்பியர் முதலானவர். உருவம் = வடிவம். முகப்பு = முன்பக்கம். முறை = தரம், தடவை, இலக்கம் = எண். எளிது = சுலபம்.

2. படத்திலுள்ள ஒவ்வொரு கடிகாரமும் என்ன மணி காட்டுகிறது ?

3. படித்துச் செய் :—வட்டவான அட்டை ஒன்று தயார் செய்து அதில் வெள்ளைக் காகிதம் ஒட்டு. அதில் கடிகாரத்திலிருப்பது போல இலக்கங்கள் எழுது. அட்டையில் சின்ன முள், பெரிய முள்போல இரண்டு

சிறிய துண்டுகள் கத்தரித்து எடு. அவைகளை வட்டத்தின் நடுவில் வைத்து ஒரு சிறு ஆணி அல்லது கம்பியில் பொருத்து. முட்களைச் சுலபமாகச் சுற்றக்கூடிய விதம் செய்.

i. நீ பாடசாலைக்கு வரும்போது மணி என்ன? உன் அட்டைக் கடிகாரத்தில் அந்த மணியைக் காட்டி முட்களைச் சரியாக வை.

ii. பகல் 12 மணிக்கு இரண்டு முட்களும் எப்படி இருக்கின்றன?

iii. காலை ஆறு மணிக்கு இரண்டு முட்களும் எப்படி இருக்கின்றன?

**4.** i. ஒவ்வொரு சிறு கோடும் நிமிஷத்தைக் குறிக்கிறது.

சூரியன் தங்கப் பந்துபோலத் தோன்றியது கோடும்.

---

கோடிட்ட சொற்களைக் கவனி. கோடு + உம் = கோடும் நிமிஷம் + ஐ = நிமிஷத்தை. உம், ஐ என்பவை பெயர்ச்சொல்லைச் சேர்ந்து வந்துள்ள இடைச் சொற்கள்.

போல—இது வினையைச் சார்ந்து வந்துள்ள இடைச்சொல்.

இடைச்சொல் என்பது பெயர்ச்சொல்லையும் வினைச்சொல்லையும் சேர்ந்து வருஞ்சொல்லாம். அது தனியே வந்து வழங்குவதில்லை.

ஐ, ஆல், கு முதலிய வேற்றுமை யுருபுகளும் ஏ, உம், போல முதலியனவும் இடைச் சொற்களே.

ii. சங்கரன் சாலப் பேசினான்.

அவன் களிகூர் மனமுள்ளவன்.

பெயர்ச்சொல், வினைச்சொற்களை அடுத்து நின்று அவற்றின் குணத்தை உணர்த்துவது உரிச்சொல் ஆகும்.

சால, கூர், நனி = மிகுதி.

---

# 36. பொருளடக்கம் படித்தல்

எல்லாப் புத்தகங்களிலும் ஆரம்பத்தில் பொருளடக்கம் அச்சிட்டிருப்பதைக் கவனித்திருக்கிருயா? பொருளடக்கம் எதற்காக? நமக்கு வேண்டிய பகுதியை எளிதிலும் விரைவிலும் கண்டறிய அது சாதகமாகும். இல்லாவிட்டால் ஒவ்வொரு பக்கமாகப் புரட்டிப் படித்துக் கண்டறியவேண்டும். பொருளடக்கத்தை உபயோகிக்க நீங்கள் பழகிக்கொள்வது நலம். இப்பொழுது இப்புத்தகத்தின் பொருளடக்கத்தின் உதவியால் பின்வரும் கேள்விகளுக்கு பதில் கண்டுபிடி. எவ்வளவு சீக்கிரத்தில் கண்டுபிடிக்க முடிகிறதென்று பார்.

1. கதையாக உள்ள பாடங்களின் எண்களையும், அவை ஆரம்பிக்கும் பக்கங்களையும் பொறுக்கி எழுது. இவைகளில் நீ அதிகமாக விரும்பும் கதை எது?

2. சம்பாஷணையாக உள்ள பாடங்களின் எண்களையும் பக்கங்களையும் எழுது. இவைகளில் அதிகச் சுவையுள்ள சம்பாஷணை எது?

3. லலிதா எழுதிய கடிதம் எந்தப் பாடம்? எந்தப் பக்கம்?

4. பஞ்சாப் சிறுவன், ஸ்ரீமதி செல்லம்மாள், ஸர் ஐஸாக் நியூடன், கவி ராஜ சிங்கம்—இப் பெயர்கள் வந்துள்ள பக்கங்களின் இலக்கங்களைக் கண்டுபிடி.

5. தரங்கம்பாடி மழைச்சேதம், ராட்டினம், விநோதப் பாக்கள், தவறு திருத்தல் இவைகள் எந்தப் பக்கம் இருக்கின்றன?

6. 28, 41, 72 பக்கங்களில் எந்தப் பாடங்கள் ஆரம்பிக்கின்றன?

7. செடிகள், மிருகங்கள், தாதுப் பொருள்கள் இவைகளைப் பற்றிய பாடங்கள் முறையே எந்தப் பக்கங்களில் ஆரம்பிக்கின்றன?

———

ஔவையார் அருளிய

# கொன்றைவேந்தன்

1. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
2. ஆலயந் தொழுவது சாலவும் நன்று.
3. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.
4. எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகும்.
5. ஏவா மக்கள் மூவா மருந்து.
6. ஐயம் புகினும் செய்வன செய்.
7. கிட்டாதாயின் வெட்டென மற.
8. கீழோ ராயினுந் தாழவுரை.
9. கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி.
10. சீரைத் தேடின் ஏரைத் தேடு.
11. சூதும் வாதும் வேதனை செய்யும்.
12. சோம்ப ரென்பவர் தேம்பித் திரிவர்.
13. தந்தை சொல் மிக்க மந்திர மில்லை.
14. தாய் சொல் துறந்தால் வாசக மில்லை.
15. திரைகட லோடியுந் திரவியந் தேடு.
16. தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது.
17. நுண்ணிய கருமமும் எண்ணித் துணி.
18. மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை.
19. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.
20. மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்.

———

அதிவீரராம பாண்டியர் இயற்றிய

# வெற்றிவேற்கை

1. எழுத்தறிவித்தவன் இறைவ னாகும்.
2. கல்விக் கழகு கசடற மொழிதல்.
3. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.
4. மன்னர்க் கழகு செங்கோல் முறைமை.
5. வணிகர்க் கழகு வளர்பொருள் ஈட்டல்.
6. உழவர்க் கழகு உழுதூண் விரும்பல்.
7. மந்திரிக் கழகு வரும்பொருள் உரைத்தல்.
8. உண்டிக் கழகு விருந்தோடு உண்டல்.
9. அறிஞர்க் கழகு கற்றுணர்ந்து அடங்கல்.
10. வறிஞர்க் கழகு வறுமையிற் செம்மை.
11. தேம்படு பனையின் திரள்பழத் தொருவிதை
வானுற ஓங்கி வளம்பெற வளரினும்
ஒருவர்க்கிருக்க நிழலாகாதே.
12. தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை
தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை
அணிதேர்ப் புரவி யாட்பெரும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலாகும்மே.
13. பெரியோ ரெல்லாம் பெரியரு மல்லர்.
14. சிறியோ ரெல்லாம் சிறியரு மல்லா.
15. பெற்றோ ரெல்லாம் பிள்ளைகள் அல்லர்.
16. உற்றோ ரெல்லாம் உறவினர் அல்லர்.
17. அடினும் ஆவின்பால் தன்சுவை குன்றாது.
18. சுடினுஞ் செம்பொன் தன்னொளி கெடாது.
19. அரைக்கினுஞ் சந்தனம் தன்மணம் அறாது.
20. புகைக்கினுங் காரகில் பொல்லாங்கு கமழாது.
21. கலக்கினுந் தண்கடல் சேறாகாதெ.
22. ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர் வீழ்க்கும்மே.
23. நூறாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
நீர்க்குட் பாசிபோல் வேர்க்கொள் ளாதே.
24. பெருமையுஞ் சிறுமையுந் தான்தர வருமே.
25. சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்
பெரியோ ராயிற் பொறுப்பது கடனே.

26. சிறியோர் பெரும்பிழை செய்தனராயிற்
பெரியோ ரப்பிழை பொறுத்தலு மரிதே.
27. கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினுங் கற்கை நன்றே.
28. கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதராகும்மே.

---

# தனிப் பாடல்கள்

1. சரஸ்வதி

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை—தூய
உருப்பளிங்கு போல்வாள் என் உள்ளத்தின் உள்ளே
இருப்பள் இங்கு வாரா திடர்.

2. மெய், பொய்

மெய்யதைச் சொல்வராகில்
விளங்கிடும் மேலும் நன்மை
வையகம் அவரைக் கொள்ளும்,
மனிதரில் தேவராவர்.
பொய்யதைச் சொல்வராகில்
போசனம் அற்பமாகும்;
நொய்யவர் இவர்கள் என்று
நோக்கிடார் அறிவுள்ளோரே.

3. கல்வி

வெள்ளத்தே போகாது; வெந்தணலில்
வேகாது; வேந்தராலும்
கொள்ளத்தான் முடியாது; கொடுத்தாலும்
நிறைவன்றிக் குறைவுறாது;
கள்ளர்க்கு மிக அரிது; காவலோ மிக எளிது;
கல்வியென்னும்
உள்ளத்தே பொருளிருக்க ஊரெல்லாம்
பொருள் தேடி உழல்வதென்னே!

4. கருமமே கண்

மெய்வருத்தம் பாரார், பசிநோக்கார், கண்துஞ்சார்,
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி

அருமையும் பாரார், அவமதிப்பும் கொள்ளார்,
கருமமே கண்ணாயினர்.

5. தேகப் பயிற்சி

சிலம்பம் முதல் மல்யுத்தம், தேசி, நடைகொள்ளின்
பலம் பரவும், மெய் இறுகும், பன்னத்—துலங்குபசி
உண்டாம், கபவாத மோடுவலி சூலையும்போம்,
உண்டாம் மனத்திடமும்; ஓர்.

6. செருப்பு

கல்லும் உறுத்தாது, காலில் முள் தையாது,
எல்லை மார்த்தாண்டன் சூடேறாது, தொல்லை வரும்
மாலை இருளில் வழி நடக்கக் கூசாது,
காலில் செருப்பிருந்தக் கால்.

7. விநோதப் பாக்கள்

i. ஆடிக் குடத்தடையும், ஆடும்போதே இரையும்;
மூடித் திறக்கின் முகங்காட்டும்—ஓடி மண்டை
பற்றிற் பரபரெனும், பாரிற் பிண்ணாக்கு முண்டாம்;
உற்றிடுபாம்பு எள்ளெனவே ஓது.

ii. நாட்டுக்குள் ஆட்டுக்கு நாலுகால் ஐயா! நின்
ஆட்டுக் கிரண்டு காலானாலும்—நாட்டமுள்ள
சீர்மேவு தில்லைச் சிவனே இவ்வாட்டைவிட்டுப்
போமோ சொல்லாயப் புலி.

iii. சற்றே துவையல் அரை, தம்பி! ஒரு பச்சடி வை
வற்றல் ஏதேனும் வறுத்து வை—குற்றமில்லை
காயமிட்டுக் கீரை கடை; கம்மெனவே மிள
காயரைத்து வைப்பாய் கறி.

8. தமிழ் மொழி வாழ்த்து

வாழ்க தமிழ் மொழி, வாழ்க தமிழ் மொழி
வாழ்க தமிழ் மொழியே.
எங்கள் தமிழ் மொழி, எங்கள் தமிழ் மொழி
என்றென்றும் வாழியவே,
வானமளந்த அனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழியவே
ஏனம் தவிர்த்து உயர்மேன்மை யளித்திடும்
வண்மொழி வாழியவே. —பாரதியார்.